# திருச்சோற்றுத்துறை தலபுராணம்



பதிப்பாசிரியர்

**இராம. கோவிந்தசாமி பிள்ளை**



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண்: 439

திருஇடைமருதூர் அருட்டிரு அம்பலவாண தேசிகர் இயற்றிய

# திருச்சோற்றுத்துறை தலபுராணமும் தேவாரப் பதிகங்களும்

பதிப்பாசிரியர் :

பண்டித வித்துவான் இராம. கோவிந்தசாமி பிள்ளை

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்

2002 ] [ விலை. ரூ. 35—00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | திருச்சோற்றுத்துறை தலபுராணமும் தேவாரப் பதிகங்களும் |
| பதிப்பாசிரியர் | : | இராம. கோவிந்தசாமி பிள்ளை |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 439 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | மே, 2002 |
| தாள் | : | 10. 9 கி. கி. டி. என். பி. எல். |
| நூல் அளவு | : | 25 × 19 செ. மீ. |
| பக்கங்கள் | : | 100 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | தல புராணம் |
| விலை | : | ரூ. 35—00 |

# வெளியிடுவோர் முகவுரை

திருச்சோற்றுத்துறை தலபுராணமான இந்நூலில் புராண வரலாறு, நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியன கூறப்பட்டுள்ளன. மேலும் இப்புராணத்தில் சிவராத்திரி விரதங்கள், கேதார விரதம், சோமவார விரதம் முதலியன பற்றி 11 சருக்கங்களில் கூறப்பட்டுள்ளன.

இந்நூலின் பதிப்பாசிரியர் பண்டித வித்வான் இராம. கோவிந்தசாமி பிள்ளை என்பவர். இந்நூல் பருவ இதழ் வாயிலாக வெளிவரப்பெற்று தற்பொழுது முதற் பதிப்பு புத்தகமாக வெளிவந்துள்ளது

இந்நூல் வெளிவர ஆவண செய்துள்ள நூலக நிர்வாக அலுவலர் திரு. சாமி, சிவஞானம் அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் இந்நூலைச் செம்மையான முறையில் அச்சிட்டுத் தந்த நமது நூலக அச்சகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

தஞ்சாவூர்.
15—5—2002

சி. கேசவராமன், இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர்
மற்றும் இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்

## AN APPEAL

Manuscripts on Palm Leaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them You can make a great contribution to the cause of the preservation not only of our National Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T. M. S S. M. Library Thanjavur.

The manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them, will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar-King of Tanjore, Rajah Serfoji, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world-famous 'Sarasvati Mahal Library.' It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR & DIRECTOR,**
**Sarasvati Mahal Library, Thanjavur.**

உ

திருச்சிற்றம்பலம்

# நூலாசிரியர் வரலாறு

சேழவள நாட்டில் வரகுணபாண்டியன், பத்திரகிரியார் முதலினோர்கட்கு அருள்புரிந்த திரு இடை மருதூர், என்னுந் திருப்பதியில், பதினேழாம் நூற்றாண்டில் பரம்பரைச் சைவ வேளாளர் மரபில் சிவ பூசைபுரியும் செந்தமிழ்க் குலத்தில் தோன்றினவராவர். இவர் தம் இருமுதுகுரவர் பெயர் முதலியன நன்கு தெரிவதற்கில்லை. இதனைப் பற்றிய ஆய்வு பின்னர் விவரமாக வெளி வரும்.

இவர், இளமையிற் பல்கலைகளையும் நல்லாசிரியரிடத்து நன்கு பயின்று அக்காலத்தில் அத்திருப்பதியில் மெய்த் திருவாளராய்த் திகழ்ந்து கொண்டிருந்த சிவஞான தேசிக சுவாமிகள்பாற் சிவதீக்கை முதலியன பெற்றுக் கொண்டு சிவபூசனையும் சைவசீலமுடையராய்ச் சுவாமிகளிடத்திற் சைவசமய சாத்திரங்களை மரபு பிறழாது கற்றுணர்ந்து நூல்கள் படும் நோன்மையும் உடையராய் மிளிர்ந்தனர்.

இங்ஙனம் வன்மையுற்ற ஆசிரியர்பால் இறைவழிபாடு நிறைவுற்ற பெரியார்கள் சார்ந்து தத்தம்பதிகட்குப் பிரபந்தங்கள் பாடுமாறு செய்வித்துக் கொண்டனர். இவர்தம் தீட்சாநாமம் அம்பலவாணன் என்பதாம். இவ் வம்பலவாண தேசிகர் இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்களை எண்ணியெண்ணித் துதித்துக்கொண்டு பல தலங்கட்குச் சென்று பணிந்து வருவாராயினர். "மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" எனுந் தாயுமானார் வாக்கின்படி, சோழநாட்டின் திருப்பதியில் பராய்த்துறை, கடம்பந்துறை (குளித்தலை), வாட்போக்கிமலை, ஈங்கோய்மலை, திருத்தலத்துறை, கள்குடி மாலை, சிராப்பள்ளி மாமலை. தென்னெறும்பியூர் மலை முதலிய தலங்களைக் கண்ணாரக் கண்டு போற்றிக்கொண்டு அன்பிலாலந்துறை, காட்டுப்பள்ளி கானூர், மழபாடி, பெரும்புலியூர், திருநெய்த்தானம், திருப்பூந்துருத்தி, திருக்

கண்டியூர், திருவையாறு முதலிய காவிரியின் இருகரையின் கண்ணும் உள்ள தலங்களைத் தரிசித்துக்கொண்டு இம்மையே தருஞ் சோறுங் கூறையும் எனத் துதிக்கப் பெறுவதும் கௌதமாச்சிரமம் எனக் கூறப்பெறுவதும், சுசன்மன் முதலிய பெருமக்களுக்கு நல்லருட்புரியப் பெற்றதுமாகிய திருச்சோற்றுத் துறைப் பெரும்பதியினையடைந்தார். இப்புலவர் பெருமான் வருகையினைக் கண்ட அவ்வூர்ப் பெருமக்களும் அத்திருப்பதியினைப் பரம்பரையாகப் புரந்து வரும் அந்தணர் குலத்துச் செந்தண்மை பூண்டொழுகும் சைவ சீலரும் மகிழ்ந் தேற்றுபசரித்தனர்.

திருச்சோற்றுத்துறைப் பரமனை நாடோறும் போற்றுதலை மேற்கொண்டனர். ஒருநாள் அப்புலவர் பெருமானாகிய தேசிக சுவாமிகளைக் கண்டு வணங்கி எங்களூர்ப் புராணம் ஒன்றினைச் செந்தமிழில் ஆக்கித்தரல் வேண்டினர். அவ் வேண்டுகோட்கிணங்கி, எம்பெருமான் திருவடியிணைகளைச் சிந்தித்துத் திரு வருட் குறிப்பதுவாயின் செய்தும் என உடன்பட்டு நன்னாளிற்றுவங்கி நன் னாளில் முடித்துதவியருளினர். அவ்வேடானது பழமையுற்றது அதனை வெள்ளைத்தாளில் சின்னஞ் சிறியவெழுத்தால் எழுதப்பட்டவொரு பிரதியும் அதனைப் பிரதிசெய்த மற்றொரு பிரதியும் கிட்டியன. இவற்றினை வைத்துக் கொண்டே இந்நூல் வெளியாவதற்கு வேண்டியன செய்யப்பட்டது. இந் நூலானது ஓர் உரையுடன் வெளிவரவிருக்கின்றது. திரு அன்னபூரணியம்மை சமேத திருச்சோற்றுத்துறைப் பரமன் திருவருளால் செந்தமிழ்நாடும் செந் தமிழ்ச் சிவபூசனையும் நின்று நிலவுவதாக. வாழ்க சீரடியாரெல்லாம்.

நலம்

திருச்சிற்றம்பலம்

# திருச்சோற்றுத்துறை புராணச்சிறப்பு

கடலாற்சூழண்ட இந்நிலவுலகு மலையும், காடும், நாடும் (வயலும் வயல்சார்ந்த இடமும்) கடற்கரையும் ஆகக் காணப்படுகின்றது. இவையே குறிஞ்சியும், முல்லையும், மருதமும், நெய்தலும் ஆகிய நிலங்களென இலக்கியங்களில் எடுத்தாளப்படும். 'கடலுலகில் வாழும் உயிர் எழு பிறப்பினுள் மிக்க காட்சிபெறு நரசன்மமாய்க் கருதப் பிறத்தலரிது'. ஆதலின், எப்பிறப்பினுஞ் செயற்கரிய சீருடைய மக்கட் பிறப்பினை யெய்தினவரே மேலானவர் என விளம்புகின்றனர். இப்பிறப்பினர்தாம் ஒப்பில் நாற்பொருளை யுறுதற்குரியவராவர். இந்நாற்பொருளே அறனும், பொருளும், இன்பமும், வீடும் எனப்படும். இந்நாற்பொருளினையும் இல்லறத்தினின்றும், துறவறத்தினின்றும் எய்துவது மரபு ஆகும். இம்மரபு, தமிழர்தம் மரபாகும். இந்தியப் பெருநிலம் வடநாடு தென்னாடு என வழங்கப்பெற்று வருகின்றது. இவ்விரு நாட்டிலும் ஒன்பது உருக்கொள் பரமன் சதாசிவத் திருமேனியாகிய சிவலிங்க உருக்கொடு திருக்கோயில் கொண்டு உயிர் வருக்கங்களுக்குப் படைத்தலாதி செயல்களைப் புரிந்தருளுவர். ஆண்டவன் அட்டமூர்த்தமாய் எழுந்தருளியிருப்பவன். இவ் வட்ட மூர்த்தங்களையுடைய திருக்கோயில்களும், அட்ட வீரட்டானங்களும் சப்த விடங்கத் தலங்களும், சப்த தானங்களும், பஞ்சபூத தலங்களும் ஆறாதாரக் கோயில்களும், அறுபானான்கு சத்தி பீடங்களும் ஆக உள்ளன. இவற்றுள் இறைவன் அருளால் அவதரித்தருளிய இருபான் எழுவரும் உருகப் பாடிய தலங்கள் மிகப் பலவாமன்றோ! நால்வராதியரால் பாடப்பெற்ற தலங்கள் மிக நலப் பாடுடையனவெனச் சாற்றுவதுண்டு. தற்காலத்தில் இருநூற்றெழுபத்தைந்தெனக் கணக்கிட்டுள்ளனர். இத்திருக் கோயில்களெல்லாம் குன்றம், கோயில், பாக்கம், நெறி நிலை, தளி, காடு, நதி, குடி, பள்ளி, துறை முதலியவற்றால் காரணங்கொடு பெயர் இட்டு அழைக்கப்படுகின்றன. அவற்றுள் துறை பற்றிய கோயில்கள் யாவையெனக் காணல் வேண்டும். அவை யாவன: கடம்பந்துறை, பராய்த்துறை, அன்பலாலந்துறை, பேணு பெருந்துறை, திருநெல்வாயிலரத்துறை, திருவாவடுதுறை, குரங்காடுதுறை, மயிலாடுதுறை, பாலைத்துறை, தவத்துறை, மாந்துறை, பாற்றுரை, திருப்பெருந்துறை

வெண்டுறை, திருச்சோற்றுத்துறை முதலியனவாகும். பொன்னியெனப் பெயர் பெற்ற காவிரியாகிய காவேரியாற்றின் இருமருங்கினும் பொருந்தியுள்ளன பல வாகும்.

**1 கடம்பந்துறை:—** சோழவளநாட்டில் காவிரியின் தென்கரைக்கண் வடக்கு நோக்கிய சந்நிதியையுடையது. இங்ஙனமாக வடக்குப்பார்த்த திருமுன் உடைய வேறெந்தத் திருக்கோயிலும் அமையப் பெற்றிலது. திருமுருகப் பெருமான் பூசித்த புனிதமுடையது. துறையென்பது ஆற்றின் கண் இறங்கி மக்களும் விலங்குகளும் நீருண்ணும் இடத்திற்குப் பெயர். அதுபோன்று இறைவன்றன் அருட்கடலாகிய துறையில் இறங்கியவன்றன் அருளைப் பெறற்குரிய நெறியினையுடைத்தாய் இலங்குவது. இத்தலம் இப்போது குளித்தலை என்று அழைக்கப்பெறுகின்றது. குழித்தண்டலை, குளிர்தண்டலை என மருவியதென்பர். இத்தல மிகப் புனிதமுடையது. கண்ணுவ முனிவருக்கும் தேவர்கட்கும் இறைவன் கடம்பர மரத்தில் எழுந்தருளிக் காட்சிகொடுத்தது எனப் புராணம் புகலும்.

பூமென் கோதை யுமைபொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின்கள் உள்ளத்தால்
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்த நம்வினை நாசமே. —என்பது அப்பர் தேவாரம்

**2 பராய்த்துறை:** இத்தலம் சோழ நாட்டிலுள்ளது. திருச்சி மாவட்டத்தில் சிராப்பள்ளியிலிருந்து ஈரோடு செல்லும் கற்சாலையில் உள்ளது. பராய்த்துறை யென்னும் புகைவண்டி நிலையமுமுண்டு. பராய் என்பது ஒரு வகை மரம். இம்மரம் இக்காலத்தே புராவென வழங்கிவருகின்றது. அகன்ற காவிரியின் தென்கரைக்கண் உள்ளது. துலைமதியில் முழுக்குச் சிறப்புடையது. தலவிருட்சமும் கோயிலின்கண் உள்ளது. கிழக்குப் பார்த்த சந்நிதி தீர்த்தம் காவிரி தீர்த்தம். இந்திரன், குபேரன், எழுமுனிவரர் ஆகியோர் பூசித்துப் பேறு பெற்ற தலமாகும். இறைவன் பெயர் செல்வர். பராய்த்துறைநாதர் என்பது. இறைவியின் பெயர் பொன்மயிலம்மை என்பது. மணிவாசகப் பெருந்தகை

பராய்த்துறை மேவிய பரமனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி

எனப் பராவியுள்ளார். சம்பந்தரும் அப்பரும் பாடியுள்ளனர்.

அரக்கன் ஆற்ற லழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்
பொருக்க நும்வினை போயறுங் காண்மினே.

—என்பது அப்பர் வாக்கு

3 **அன்பிலாலந்துறை:** சோழவளநாட்டுத் தலங்களில் கொள்ளிடமாநதி வடகரைக்கண் உள்ளது. அன்பு இருக்கையாக ஆலமரத்தின்கீழ் எழுந்தருளியருள்புரியும் தலம். ஆலத்தினையுண்ட நீலகண்டன் அன்பால் வழிபடும் அன்பருக்கருள்புரியும் இடமிதென்பர். ஆலந்துறையென்பது மருவி அன்பில் எனச் சுருக்கபெயர் இட்டு அழைக்கின்றனர். காரணம் தெரியவில்லை. எதுவாயினுமாகுக, கொள்ளிடத்தின் தென் கரைக்கண் நின்று அப்பரும் சம்பந்நரும் பாட இவர்களுடைய பாடல்களைச் செவிசாய்த்து ஏற்றுக் கொண்டருளிய விநாயகர் திருவுருவமும் திருக்கோயிற்கண் உள்ளது. இக் கோயிலுக்குச் சமயப் பெரியார் இருவர் திருப்பாடல்கள் உண்டு. கிழக்கு நோக்கிய சந்நிதி. சத்தியவாகேசுரர் சௌந்தரநாயகி என்பன அம்மையப்பர் திருப்பெயர்களாம்.

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீநெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோனஎஞ் செல்வனைக் கூறிடக் கிற்றியே

என்பது திருநாவுக்கரசர் செந்தமிழ்.

**பேணு பெருந்துறை:** இத்தலம் சோழவள நாட்டில் கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் ஏழு கல் தொலைவிலுள்ளது. திருப்பந்துறையென மருவி வழங்கப்பெற்று வருகின்றது. திருமுருகப்பெருமான் பேணி வழிபாடாற்றின திருக்கோயில் என்பர். சிவசக்தி, பிரமன், முதலினோர் பண்பொடு வழிபாடாற்றி நிலையுற்றதலம். முருகப்பெருமான் ஊமைத்தன்மை யொருவிய பெருமையுடைத்தென்பது வழக்கு. தலவிருட்சம் வன்னி கிழக்குநோக்கியுளது. தலம் சிலமாகவிருக்கின்றது. கவனிப்பதுமில்லை. கோயிலுக்கு முன்னர் மங்கலதீர்த்தமென ஒரு தடாகங் காணப்பெறுகின்றது. இஃது அரிசிலாற்றங்கரைக்கண் உள்ளது. அம்மையப்பர் திருப்பெயர் மலையரசியம்மை சிவானந்தேசுரர் என்பது

மைம்மா நாகம் பன்மலர் கொன்றை
பன்றிவெண் கொம்பொன்று பூண்டு
செம்மாந் தையம் பெய்கென்று சொல்லிச்
செய்தொழில் பேணியோர் செல்வர்
அம்மா னோக்கி யந்தளிர் மேனி
யரிவை யோர்பாக மமர்ந்த
பெம்மா னல்கிய தொல்புக ழாளர்
பேணு பெருந்துறை யாரே. சம்பந்தர் தேவாரம்

**திருநெல் வாயிலாத்துறை:—** நடுநாட்டிலுள்ளது. தென்னார்க்காடு மாவட்டத்தில் வெள்ளாற்றங்கரைக்கண் உள்ளது. இது இக்காலத்தில் திருவேட்டத்துறை என வழங்குகின்றது. மும்மண்டலத்து முடிமன்னரும் வழிபட்டுத் தத்தம் பெயரால் திருக்கோயில்கள் எடுப்பித்துள்ளனர். இங்கெழுந் தருளிய பெருமான் பெருமாட்டியர் பெயர் அரத்துறைநாதர், ஆநந்தநாயகி வெள்ளாறு தீர்த்தம் இத்திருக்கோயில் சப்த துறைகளுள் ஒன்று. ஏனைய ஆறு துறைகளாவன:— ஆதித்துறை, ஆலந்துறை, மாந்துறை, ஆடுதுறை திருவதிட்டத்துறை, திருக்கைத்துறை என்பன. இவை வெள்ளாறாகிய நிவா நதியின் இருகரைக்கண்ணுமுள்ள, திருஞானசம்பந்தப் பெருமானுக்கு இறைவன் முத்துச்சிவிகையும், முத்துக்குடையும், சின்னமுங் கொடுத்தருளிய தலம் விநாயகப்பெருமானுக்கண்மையில் அட்டலட்சுமிகளும் சிற்பவேலைப்பாடுகளும் மிகப் பாராட்டற்பாலனவாம். இத்தலத்திற்கு மூவருளிய செந்தமிழ்ப் பாடல்கள் உள்ளன.

1 எந்தை யீசன் எம்பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால் சென்றுகை கூடுவது அன்றால்
கந்த மாமலர் உந்திக் கடும்புனல் நிவா மல்கு கரைமேல்
அந்தண் சோலைநெல் வாயில் அரத்துறை யடிகடம் அருளே. சம்பந்தர்

2 கடவு ளைக்கட லுள்ளெழு நஞ்சுண்ட
உடலு ளானையொப் பாரியி லாதவெம்
அடலு ளானை அரத்துறை மேவிய
சுடரு ளானைக் கண்டீர்நாந் தொழுவதே. அப்பர்

3 கல்வாய் அகிலுங் கதிர்மா மணியும் கலந்துந்திவருந் நிவவின் கரைமேல்
நெல்வாயில ரத்துறை நீடுறையும் நிலவெண் மதிசூடிய நின்மலனே
நல்வா யில்செய்தார் நடந்தா ருடுத்தார் நரைத்தார் இறந்தார்
என்று நானிலத்திற்
சொல்லாய்க் கழிகின்ற தறிந்தடியேன் தொடர்ந்தேன் உய்யப்
போவதோர் சூழல் சொல்லே. சுந்தரர்

**திருவாவடுதுறை:—** இத்தலமானது சோழவள நாட்டில் காவிரியின் தென்கரைக்கண் உள்ளது. மாயூரத்திற்கும் மேற்கில் ஒன்பது கல் தொலைவில் உள்ளது. இறைவன் பெயர் மாசிலாமணியீசர். இறைவியின் பெயர் ஒப்பிலா முலையம்மை. தீர்த்தம் கோமுத்தி தீர்த்தம். மரம் பேரரசு ஆகும். பத்தாந் திருமுறை பாடிய திருமூல நாயனார் எழுந்தருளிய தலம். இத்தலத்திலே இப் பேரரச மரத்தடியிலே சிவயோகத்தமர்ந்து ஆண்டிற்கொரு திருப்பாட்டாக மூவாயிரம் ஆண்டுகளிருந்து மூவாயிரம் பாடியருளினார். ஒன்பதாந் திருமுறையாசிரியருள் ஒருவராகிய திருமாளிகைத் தேவர் வாழ்ந்த பதியாகும். இவர் திருக்கோயில் திருமடத்தின்கண் உள்ளது. சிவபெருமான் சுவர்ணத்தியாகர் என்று அழைக்கப்பெறுவர். திருஞானசம்பந்தருக்காயிரம்பொன் அளித்தருளிய பெருமையுடையது. விநாயகருக்கு அழகு விநாயகர் என்று நாமமாம் பசு வடிவுடன் உமாதேவியார் பூசித்த காரணத்தால் ஆவடுதுறையென்றாயிற்று. பசு வடிவில் பூசித்துப் பின் அவ்வடிவினை நீக்கிய துறையென்பதாகும். ''கோகழியாண்ட குருமணி'' யென்பது திருவாசகம். மூவரும் பாடியுள்ளனர்.

1 இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவென்
கடறனி லமுதொடு கலந்த நஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே.

''இதுவோ எமையாளுமா றீவதொன் றெமக்கில்லையேல்
அதுவோ உனதின்னருள் ஆவடு துறையரனே.
—ஆளுடைய பிள்ளையார்

2 பாதிப் பெண்ணொரு பாகத்தின் பன்மறை
ஓதி யென்னுளங் கொண்டவ னொண்பொருள்
ஆதி யாவடு தண்டுறை மேவிய
சோதியே சுடரே யென்று சொல்லுமே. —ஆளுடைய அரசு

3 ஒப்பி லாமுலை யாளொருபாகா உத்தமா மத்தமார்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவகளைத் தங்கே மூவருக்கருள் செய்யவல் லானே!
செப்ப வானிழற் கீழிருந் தருளும் செல்வனே திருவாவடு துறையுள்
அப்பனே யெனை யஞ்சலென் றருளாய் யாரெனக்குறவு அமரர்கள் ஏறே.
—ஆளுடைய நம்பி

**குரங்காடுதுறை:** வட குரங்காடுதுறை, தென் குரங்காடுதுறை எனவிரு தலங்கள் உள. இவை சோழவள நாட்டில் காவிரியின் இருகரையின் கண்ணும் உள்ளன. வட குரங்காடுதுறையில் வாலியும், தென் குரங்காடுதுறையில் சுக்ரீவனும் பூசித்த பொற்புடையது. திருச்சோற்றுத்துறைக்குங் கீழ்பால் ஆறு கல் தொலைவில் உள்ளது வடகுரங்காடுதுறை. இவ்வூர்ப் பரமன் திருப்பெயர் அழகுடை சடைமுடிநாதர். குலைவணங்கீசர் என்பதாம். அம்மையின் பெயர் அழகுடை சடைமுடியம்மை. தீர்த்தம், காவிரிநதி. ஆனந்தக்கூத்தர் சிவகாம சுந்தரி அம்மை இவர்கள் திருவுரு சிலையில் உள்ளன. சிவலிங்கத் திருவுரு மிக்க வனப்புடையது. கருப்பிணியாகிய ஒரு மங்கையின் நீர்வேட்கை தணிப் பான் வேண்டித் தென்னங்குலையினை வளைத்துக்கொடுத்த காரணத்தால் இறைவனுக்குக் குலைவணங்கீசர் எனப் பெயர் வந்துள்ளது.

நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொ டொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னு கோயில்
ஏலமொடு இலையிலவங்கமே யிஞ்சியே மஞ்ச ளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே. —சம்பந்தர்

**தென்குரங்காடுதுறை:—** சுக்ரீவன், அநுமான் பூசனைபுரிந்த தலம் ஆபற்சகாயேசர், பவளக்கொடியம்மை, காவிரியாறு, வாழைச்சிறப்பு. சம்பந்தரும் அப்பரும் பாடியுள்ளனர்.

1 பரவக் கெடும் வல்வினை பாரிடமுஞ் சூழ
இரவிற் புறங் காட்டிடை நின்றெரியாடி
அரவச் சடையந்தணன் மேய அழகார்
குரவப் பொழில் சூழ்குரங் காடுதுறையே. — சம்பந்தர்

2 குளிர்புனற் குரங் காடு துறையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளியனைந் நினைந் தேனுக் கென்னுள்ளமும்
தெளிவினைத் தெளியத் தெளிந்திட்டதே. — அப்பர்

திருமயிலாடுதுறை என்பது கௌரிமாயூரம் என்பதாகும். இப்பெயர் இக்காலத்தே மாயவரம் என மருவித் திரிந்துளது. சோழவள நாட்டில் மிகப் பிரசித்தமான தலம். மாயூரநாதேசுரர், அஞ்சொல்நாயகி (அஞ்சொலாள்) காவிரியாறு. பார்வதியம்மையார் மயிலாயிருந்து இறைவனை வழிபட்ட தலம். இதனால் கௌரிமாயூரம் எனப் பெயர் வந்துளது.

வெஞ்சினக் கடுங் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும் பிறப்பு மறுக்கலாம்
மஞ்சள் மாமயி லாடு துறையுறை
அஞ்சொ லாளுமை பங்கன் அருளிலே. —அப்பர்

**பாலைத்துறை:—** இப்பதியானது சோழவள நாட்டில் காவிரியின் தென் கரைப் பகுதியிலுள்ளது. பாபநாசம் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே ஒரு கல் தொலைவிலுள்ளது. அம்பிகை சந்நிதி இறைவனுடைய திருக்கோயில் வலப்பாலில் உள்ளது. தவளவெண்ணகையம்மை எனத் தேவி திருப்பெயர் செப்பப் பெறுகின்றது. பாலைத்துறை என்று பெயர் வந்த காரணம் நன்கு புலப்படவில்லை. இஃதே போன்றுதான் திருச்சோற்றுத்துறை தலமும் அமை யப் பெற்றுள்ளது. தாருகாவன முனிவர் ஏவிய வேள்வியினின்றும் புறப்பட்டு புலியினையுரித்து அதன் அதனை ஆடையாக ஆண்டவன் அணிந்தருளிய அற்புதமுடையது. கிழக்கு நோக்கிய வாயிலையுடையது. வசிட்டர், இராமர் சீதை, இலக்குமணர், தௌமியர், அருச்சுணன் முதலிய சிறந்தவன்பர்கள் கண்டு வணங்கிய தலம். இத்தலத்துத் தேவாரம் திருவைந்தெழுத்தின் சிறப்பினை மறை புகல்வது போலப் புகன்றுள்ளது. 'மண்ணினார் மறவாது சிவாய என்று' எனத் துதிக்கப் பெற்றுளது. இறைவன் பெயர் பாலைவனநாதர் என்பது.

கவள மாகளிற் றின்னுரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கைபோர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே. —அப்பர்

**பாற்றுறை:—** இத்தலமானது சோணாட்டிலுள்ளது. திருவானைக்கா என்னுந் திருப்பதிக்குக் கீழ்ப்பால் ஐந்து கல் தொலைவிலுள்ளது. இறைவன் பெயர் மூலநாதர். இறைவியின் பெயர் மேகலாம்பிகை, மோகாம்பிகை என்ப தாம். மாபெருந் தவமுடைய மார்க்கண்டன் பூசித்த புனிதமுடையது.

மார்க்கண்டேயர் இறைவனை பூசிக்கும்பொழுது இறைவனுக்குக் காட்டுவதற்கு பசுப்பால் கிட்டாமல் வருந்த, சிவபெருமான் பால் பெருகுமாறு அருள்புரிந்த திருப்பதியாகையால் பாற்றுறையெனப் பெயர் பெற்றதென்பார். "பாற்றுறை மேவிய பத்து நூறு பெயரான்" என்பது சம்பந்தர் வாக்காகும்.

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவின் நல்லார் எயிலெய்தார்
பாவந்தீர் புனல் மல்கிய பாற்றுறை
யோவென சிந்தை யொருவரே. — திருஞானசம்பந்தர்

**தவத்துறை:—** இஃது வைப்புத்தலம். கூத்தபெருமானைச் சிறப்பாக வுடையது. சோணாட்டிலுள்ளது. இதன் வரலாறு புராணத்திற் காண்க.

**வெண்டுறை:** சோணாட்டுத் தலங்களிலொன்றாம். இறைவன் இறைவியின் பெயர் வெண்டுறைநாதர், வேல்நெடுங்கண்ணியம்மை யென்பதாம். மன்னார்குடி புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கு 6 கல் தொலைவிலுடையது. இத்தலத்தில் பிருங்கி முனிவர் வண்டுருக்கொண்டு பூசித்தனர் என்பார். வித்தியாதரர் முதலானோர் பூசித்த தலமாம். வெண்மை—ஞானம் அஃது சிவஞானம். அச்சிவஞானத்தைப் பூசிப்பவர்க்கருளிய தலம் எனல் பொருந்தும்.

காலனை யோருதை யில்லுயிர் வீடுசெய் வார்கழலான்
பாலொடு நெய்தயி ரும்பயின் றாடிய பண்டரங்கன்
மாலை மதியொடு நீரரவம்புனை வார்சடையான்
வேலன் கண்ணியொ டும்விரும் புமிடம் வெண்டுறையே. -சம்பந்தர்

பெருந்துறை என்பது ஆவுடையார்கோயில். அழுது அடி அடைந்த அன்பராகிய மணிவாசகருக்குப் பெருங்கருணை புரிந்தருளிய தலமாகும். இத்தலமானது மிகச் சிறப்புடையது.

**திருச்சோற்றுத்துறை:—** இத்தலத்தினைப் பற்றியே புராணம் சிறப்பாகக் கூறியுள்ளது. சோழ நாட்டுக் காவிரியின் தென்கரையில் அமையப்பெற்ற பெரும் பதியாகும், சப்தத்தான தலங்களுள் மூன்றாவதாகக் குறிக்கப்பெறுவது கவுதமர் பூசித்த தலனுடையது. கவுதமர் திருவுருவம் திருக்கோயிலில் பிர

திட்டை செய்யப் பெற்றுள்ளது. திருப்பழனப் பெரும்பதிக்கு நேர் தெற்கில் ஒரு கல் உள்ளது. இந்திரன், சூரியன், கௌதமர் முதலியவர் பூசித்தனர் என்பது வெளிப்படை. சிவபத்தனான அருளாளன் (மறையவன்) பசிப்பிணியால் வருந்தும்போது அவனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத சோறு அளித்தருளிய தலம் என்பது கர்ணபரம்பரை வழக்கு. ஊருக்குத் தெற்குச் சோறுடையான் வாய்க்கால் என ஒரு கால்வாய் உள்ளது. இக்கோயிலுள் ஆறுமுகப் பெருமான் இருபாலும் வள்ளி தெய்வானையம்மையார் இன்றி எழுந்தருளியுள்ளார். ஒரு முனிவருக்கு ஒரு வயலில் நெல் விளையாது அரிசியாகவே விளைந்ததென்றும் பின்னர் ஒரு காரணத்தால் மறைவுற்றதென்றும் தற்காலத்தலும் அவ் வயலில் ஒரு கதிர் அரிசியாக விளைந்து வருவதாகவுங் கூறுகின்றனர். இவ் வரலாறு எல்லாம் புராணத்திற் காண்டற்கு இல்லை. இப்புராணமானது தெள்ளுதமிழ் நடையாலாயது, குறித்த பொருளை குறிக்கொண்யார் வைக்கு நெறி மிகப் போற்றற்குரியது. பாயிரத்தில் விநாயகர் துதிவிளம்புகையில் மண்ணுலகில் மாக்கள் வளம்பெற வானம் பொழிவதும், அதனாற் புவி செழிப்புடைத்தாகலும், ஆகமத்தொடு பொருந்திய வைதீக சைவம் விளங்குதலுடைத்தாகலும் கூறப்பட்டுள்ளது. ஆகமம் சைவாகமங்களும் மறை வேதங்களும் என விரித்துணர்த்தியுள்ளார். திருமுருகன் துதியில், ஒப்பற்ற ஏறு வரைந்த கொடியுயர்த்திய பரமனுக்குப் பிள்ளையாயினானை எனவும், விண்ணுலக மடந்தையாகிய இந்திரன் குமாரியாகிய தெய்வயானையம்மையாரினைத் திருமணம் புரிந்துகொள் திருமார்பனை எனவும், ஆனைமுகக் கடவுளை அண்ணனாக உடையவனை எனவும், என்றும் இளமையுடையவனை எனவும், மணம் பரந்து தேனொழுகு கடப்பம் பூந்தாரினையுடையவனை எனவும், முத்தி விரும்பினவருக்கு முன் மூன்று முகங்களும், உலகியலில் ஈடுபாடுடையவர்க்குப் பின் மூன்று முகங்களுமாக ஆறுமுகங்களையுடையவன் எனவும், வள்ளிநாயகியாரை வலப்பக்கமாக உடைய சீரிய சிறப்பினையுடையவனை எனவும், வள்ளிநாயகியாரின் தனமாகிய உயரிய மலையினை மேவும் புயங்களாகிய மலையினையுடையவனை எனவுங் கூறிய கற்பனை பாராட்டற்குரியது.

"ஓரானை யுயர்த்தவர்க்குச் சேயானை வானானையுறுமார்பனை
போரானைக் கிளையானை யிளையானை நறைபரந்து பெருகுநீபத்
தாரானை யாறுமுகத்தானை யருளானைவள்ளி தனமாத்துங்கச்
சீரானை மேவுபுயச் சிலையானை மலையானைச் சிந்தைசெய்வாம்."

திருச்-௦

என்னும் பாடல் சிந்தனை செயற்குரித்தாம். இதனைப் பாடிவருபவர் எல்லா நலனுமுறுவர் என்பது ஒருதலையாம்.

மாணிக்கவாசகர் துதிச் செய்யுளில் மாணிக்கங்களின் வகைகளை நிரல் படுத்தியுரைத்திருப்பது நல்ல கற்பனையாம். 1 முத்து 2 மரகதம் 3 வயிரம் 4 நீலம் 5 கோமேதகம் 6 புட்பராகம் 7 மாணிக்கம் 8 பவளம் எனக்கூறியிருப்பது கற்றறிந்தோர் போற்றும் கவினுடைத்தாக் கவினுறுகின்றது.

### திருவாதவூர்

முத்தநகை மரகதத்தை யிடங்கொண்ட வொருவயிர முழுநீலத்தை
வைத்த மணிகண்டனுயர் வெள்ளியிற் கோமேதகங்கொள் வானோர்க்கெட்டாச்
சுத்தனிரு பதபுட்ப ராகமிக வந்து பெருந் துறையில் ஞானச்
சித்திபெறு பவளவாய் மாணிக்கவாசகனைச் சிந்தைசெய்வாம்.

உலகின்கண் பிணியுற்றோரை யப்பிணியினின்று விடுவிப்பதற்கு மணி மந்திரம் மருந்து வேண்டப்பெறும். உடற்பிணி போக்கற்போல உயிர்ப்பிணியாகிய விடமொருவுவதற்குக் கண்டிகை ஐந்தெழுத்து. திருநீறெனச் செப்பியிருக்கும் ஒப்பில் உவமையினை உளக்கண்கொண்டு பார்த்தற்குரியதாகும், இக் கருத்தினைச் சிவனடியார் துதியிற் காண்டல் வேண்டும்.

அப்பாட்டு வருமாறு:

ஐம்பொறிக ளெனு மரவ வாயின்வரு விடயவிட மதுமீதூர்ந்தே
தம்புலனை யெழுவேக முடன்மயக்கத் தருட்பார்வை சார்ந்து நாளும்
இம்பர் மணி மந்திரங்கள் மருந்தெனக் கண்டிகை யினையைந் தெழுத்தை
நீற்றை
நம்புமடி யவர் அடிகள் முடியாக நாமுடிமேல் நயந்துகொள்வாம்.

பல துளைகளையுடைய ஓர் உழக்கு எனும் அளவு கருவியினால் சப்த சாகர நீரினையளத்தற்போன்றுளது கிருபா சமுத்திரமாகிய இறைவன்றன் அருட்கதையினை யான் இயம்பப்புக்கது என அவையடக்கம் பாடியுள்ளார். இஃது யாரும் இயம்பாக் கற்பனையாகும். இங்ஙனமாகப் பல கற்பனை நயமுடைச் செய்யுட்களைப் புராணத்தில் காணலாம். அப்பாடல் வருமாறு:

அலையெறி யெழுசுட லகலம் யாவையும்
நிலவிய பெரும்புறக் கடலி னீரெலாம்
பலதுளை யுழக்கினால் அளக்கும் பான்மையாம்
இலகரன் கதையையான் இயம்ப லெண்ணலே என்பதாம்.

இந்தப் புராணத்தில் மாகதானச் சருக்கத்தில் ஒரு வரலாறு வருமாறு:— தமிழ் நாட்டை நான்கு மறைகளை நன்கோதிய நற்றவம் பெரிதுடைய கற்கர் கோத்திரத்தில் துற்பாக்கியன் என்னும் மறையவன் கொண்டலையனைய கூந்தலழகியாகிய குணசரஸ்வதியினை மணந்து தந்தை தாயர், நல்ல உடன்பிறந்தாரொடும் வாழ்நாளில் மனம்போன போக்கெலாம் சென்று, ஐம்பெருங் குற்றங்களையும் அறிவொடுஞ்செய்து, தன்னுடைய பங்கினையும் பகிர்ந்துகொண்டு கண்ணான் மருட்டிக் காமத்தீ மூட்டுங் காரிகையின்பேரில் காதல் கொண்டு, பழியொடு பாவ நல்கும் பரத்தையராகிய சூத்நங்கையின் இணங்கல் காரணமாக கனகமும் அறிவுமிழக்கப்பெற்று கற்பரசியாகிய தன் மனைவியின் முகத்தினையும் பாராதவனாகி நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லென்போரும் விடரும் தூர்த்தரும் ஆகிய சிற்றினத்தைச் சேர்ந்து கோலிய பாவங்கட்கோர் கொள்கலமாகி காமநீவியர்க்கு நிதி கிடையாமல் வாடி, நீதிசேர் சோழநாட்டில் நிதிநிறையந்தணாளன் கோதிலாது ஒரு நாள் பாரியை ஆகிய குலமகளுடன் கங்குற்பாதியிற்றுயில்கையில் கள்வனாகிச் சென்று நல்ல தந்திரத்தால் கதவுகளைத் திறந்துகொண்டு, விழிகரமாக நாடி, வியன் பொருள் கவரச் செல்லும் வழி தெரியாது விழிதுஞ்சு மைந்தனை காலினால் மிதித்தனன். மிதியுண்ட மைந்தன் அழுதனன்.

அவன் கழுத்திலிருந்த விலையுயர்ந்த முத்துமாலையினை அத்தத்திற் பற்றியகல அதனைக்கண்ட மைந்தன் எழுந்தான். எழுந்த மைந்தனை அக்கள்வன் தாய் தந்தையர் போலத் தடவினன். அங்ஙனம் வருடுகையில் தாய் தந்தையர் கரமன்றெனக் கண்டு திருடன் எனக்கொண்டு அவன் கால்களைப் பற்றினன். உடனே யுந்தியுதறித் தள்ளியோடலும். மைந்தன் தள்ளப்பட்டதால் இறந்து பட்டனன். துயின்றவர் எழுந்து வாயிறொறும் தடைசெய்து கூகூவென்று கூச்சலிட ஊரவரெல்லாம் விளக்கினை யேற்றிக்கொண்டுவந்து கள்ளனைக் கண்டு மைந்தன் இறந்துபட்ட மன வருத்தத்தால் உதைத்து அடித்துக் கொன்று விட்டனர். இப்பாதகன் வேதம் பயின்ற விப்பரன் மகனைக் கொன்ற காரணத்தாற் பிரமச்சாயையாற் பற்றப்பட்டான். பிரமச்சாயை பிடித்த கள்வன் தன்னை பெரும்பசி தாகம் மேவி வடித்திடுசூல வேற்கை வயிரவர்

ஒறுப்பவாடி, ஆகாயத்திற் கழன்று துயர்க்கடற்கெல்லை காணாது மக்கள் இயங்கும் தக்க சாலையில் ஓர் அரசமரத்தின் கொம்பிற்றங்கி யாங்கு வருவோர் தம்மை மாய்த்துச் செம்புனல் குடித்துண்டு தீங்கு செய்திருந்த நாளில், நாட்டினில் உயர்ந்த சோழ நாட்டினில் நான்கு வேதம் முறை பயின்ற வாய்மையொழுக்கங் குன்றா காசிபர் குலத்து ஓர் பார்ப்பான் சுதர்மன் என்னும் பெயரினன் அமிர்த்தினை விண்ணோர்க்காக்கி ஆலத்தினை தனதாக்கிக் கொண்ட அம்மையப்பன் மேவிய சோற்றுத் துறைக்குச் செல்பவனாயினன். செல்பவன் சிவனார் நாமம் செப்பி யங்கேகும் போழ்தில், நிற்பாய் என அவ்வரசிலிருந்த அப்பாதகன் அவ்வந்தணாளர்க்குத் தீங்குறுத்த அணுகலும், அம்மறையவன் உரை செயும் சிவநாமத்தின் நல்லொலி செவியிலேற நடுங்கி முன் வணங்கி நின்றான்.

அங்ஙனம் நடுங்குகின்ற அப்பாதகனை நோக்கி நீ யார், உனக்குற்ற செயல் யாது? என வினவலும், தன்னுடைய உயர்ந்த குலமும் முன்செய் நன்றலச் செய்கையும் நண்ணிய பாவத்தையும் நவின்று இன்று உம்மைக் கண்டேன் இடர் அகன்று அறிவும் எய்தினேன் என்றான்.

சிறியவர் பெருமையோரைச் சேர்ந்திடிற் சிறுமைநீக்கி
அறிவு நல்லொழுக்கங் காட்டி யருங்கதி புகவுஞ் செய்வர்
நெறியது சரதமன்றோ! நீயெனை முழுதுங் காத்தல்
உறுதியா மென்ன நன்றென் றுரைத்துநீ யஞ்சல் என்றான்.

பின்னர் சுதர்மன், துர்ப்பாக்கியனையும் உடன்கொண்டேகித் திருச்சோற்றுத் துறை நன்னகருக்கோர் சார்பைகென நிறுத்தித் தான் சென்று காவிரியைக் கண்டு தொழுது, அயலார் அன்னம் தோகையர் போகம் எண்ணெய் பழுது என விலக்கி ஓர் பொழுது உணவுண்டு, இவ்வூரில் ஓராண்டுறைய வேண்டுமென உறுதி பூண்டு, நாடோறும் பொன்னிப் புனிதநீரில் பொற்புற முழுகுதலைச் செயல் வேண்டுமெனச் சங்கற்பஞ் செய்துகொண்டு சூரியன் உதயமாகுமுன் காவிரி நீராடிப் பத்தாயிரம் பஞ்சாக்கரம் செபம்பண்ணி வரன்முறையொடு மறையோதி ஞானவரதர் ஆகிய ஓதனபுரேசன் சரணிருபோதுஞ் சேவை, சாற்று முப்போதுஞ் செய்து ஈசனுக்கநேக தீபம் ஏற்றி அந்தணர்கள் யார்க்கும் நறுநெய் யடிசில் நன்மூகங் காட்டிப் படைத்து, மாகமதியில் மும்பானாளும் தப்பாது காவிரியிற் படிந்து, அங்ஙன ஆடிய பலனில் மூன்று நாட் பலனை அப்பாதகனுக்கு ஈந்தனன். அங்ஙனம் ஈதலும் பிரமகத்தி யவனைவிட்டு நீங்கிற்று.

நீங்கிய காலையில் போதமும், குணமும் மேவப் பொலிந்து துர்ப்பாக்கியன் றான், குளிர்ச்சி பொருந்திய முத்துப்பதித்த கிரீடம் திகழ்மணிப் பதக்கம் ஆடை காதணியணிந்து தோன்றும் கவினுறு தேவனானானான். அக்கணம் அமரர் விமானம் அணைதர அதனிலேறி பக்கத்தில் வெண்கவிரிபுடையிரட்ட பனிமதிக் குடை தாங்கி கரும்பினி ரதம்போல் வீணாகானம் இசைத்து அபி நயத்தோடு ஆடி, கரிய கூந்தலினையுடைய காரிகையர் தேவர் பக்கத்திற் பொலிந்து தோன்றி வலம்வர, சுதர்மன் என்னும் புண்ணியன் பாதம் வணங் கிக் காவிரியினீராடும் மூன்று நாள் பலனை எனக்களித்தலால் அல்லல் செய்யும் பிரமகத்தியகன்று வானவனாகி விளங்குகின்ற பாக்கியமும் எய்தினேன். இவ் விடத்தில் தேவரீருடைய அருளும் பெற்றேன். இனியெனக்கறியும் பான்மை யியம்பெனச் சுதர்மன் கூறுவான். அளவில் பாபம் ஆற்றியவர் அருநரகினை அடைவர். பேய், நிருதர், மரம், பன்றியாய்ப் பிறப்பார் எனப பல நன்னெறி நவின்று சிவபூசனையின் சிறப்பினைச் செப்பி, ஓதிய இவற்றினையுண்மை யென்றுணர்ந்து கொள்வாய். எனலும் துர்பாக்கியன் சுவர்க்கபோகந் துய்த்துப் பின்னர் மீண்டும் மண்மேல் முதலாம் வருணத்தில் அதிகர்த்தன் புதல்வனாகி நற்சுனதேவன் என்னும் நாமமும் பூண்டு நால்வேதமாதியோதி விகற்பனாகி வாழுநாளில் விசுவாமித்திரர் வந்து அஞ்செழுத்தோதியருளப் பின்னர், தலங்களிற் சிறந்த இந்தத் தலத்து வந்து அநேக நற்புண்ணியச் செயல்களைப் புரிந்து மாக மாதத்தில் காவிரியாடி, கண்ணுதற் பரமன் கழலடி யெய்தினன் என்பதாம். இப்புராணத்தின் இறுதிச் சருக்கமாகிய சிவராத்திரிச் சருக்கத்திற் கூறப்பெறுஞ் சிறப்பியல்புகளையுஞ் சிறிது சுருக்கி வரைகுதும். செந்தமிழ் நாவலர் பந்தித்திருந்த சங்கம் இலங்கிய கூடல்மாநகரில் வேட்டுவர் குலத்தில் சம்பகன் என்னும் மருந்தில் கூற்றின் வடிவினை யொப்பான் ஒருவன். ஐம்பெருங் குற்றங்களைச் செய்மையாப் புரிந்து, தன் நாட்டினை விட்டு சோணாட்டினை யடைந்தனன். அங்குள்ள கானிடைத் தங்கிக் களவினைப் புரிந்து, ஆறலைப்பவன் ஆகலின் ஆற்றிடைச் செல்பவர் செல்வங்களையும் கவர்ந்து, அப்பொருள் அணிகலன்களை பொருட் பெண்டிர் பொருட்டுப் போக்கி பின்னர் திருவரங்கம், திருவாணைக்கா பெருங் கோயிலின்கணுள்ள அணிகலன் களைக் கவர்ந்துகொண்டு சிராமலைப் பெருவிழா பார்ப்பவரொடுஞ் சென்று அங்குள்ள ஆலயப் பொருளைச் சாலப்பற்றிக்கொண்டு புறப்படுகையில் அங் குள்ள தானீகர்கள் கண்டு கூவினர். சம்பகனும் தன்னொடும் போந்த வேடர் களும் தப்பியோடலாயினர். காவலர் பின்பற்றி வளைத்து வேடுவர்களைச் சமர்செய்து வீழ்த்தினர். அதுபோழ்தின் சம்பகன் என்பான் தப்பி மறைந்த னன். காவலர் கரவடர் பற்றின பொருளைக் கண்டு கொண்டு ஆலயத்துய்த்த

ன்ர். தப்பிய சம்பகன் பிச்சைக்காரன் வேடம் பூண்டு தப்பியமை தம்பிரான் புண்ணியமெனச் சிந்தித்துக் கிழக்கு நோக்கிக்கொண்டே ஓட்டமாயோடிவந்து ஓதனமாபுரியை அடைந்தனன். அன்று மகா சிவராத்திரி நாள். ஆகலின் எண்ணில் புண்ணியர் கண்ணுதற் கடவுளைக்காண நண்ணினார். இருட்டில் திருட்டுக்கை நில்லாது ஆகலின் புலினனாகிய சம்பகனும் ஊணும் உறக்கமு மின்றிக் களவுபுரியக் காத்தும் பயன்படவில்லை. அன்புடையவர் அரனைப் பூசிக்கும் நெறியினரராய் அயர்விலராய் இருந்தனர். காவலரும் யாமந்தோறும் கடுகியார்த்தனர். கரவடனாகிய கள்வனும் நான்கு யாமத்தும் அருச்சனை யும், சீருத்திர சபமும், சமகங்களும், பஞ்சசாந்திகளும் யாங்கும் நெய்த் தீபங் களும் இலங்கியன பகற்போல் இராக்காலமிருந்தமையால் திருடற்கியலவில்லை. புலர்ந்ததும் காவிரியாடிப் பிச்சையேற்றுண்டு மறுநகர் மறுகினான். ஆயினும் பாவம், அச்சம் பழிபகைக் கேதுவாய், தாவில் அந்நியர் தாரம் விரும்புறும் ஓவில் மூடரொடும் தினமுங்கூடி மேவும் சோரத்தொழில் நீங்கிலன். இங்ஙன மாகவிருந்து, மண்ணில் அங்ஙனம் மரித்தனன். இவன்றன் ஆவியை எமக் கிங்கரர்கள் கட்டிக்கொண்டுபோய் எமன் முன் நிறுத்தினர். சீறுமந்தகன் சித்திரகுப்தனைப் பார்த்து இவன் புரிந்த கொடுமைகளைக் கூறுக என்றலும் அவன் செய்பாவமனைத்தும் கூறி சிவராத்திரியிற் றிருச்சோற்றுத்துறையில் உணவும் உறக்கமும் இன்றியிருந்தனன். மறுநாள் பிச்சையேற்றுண்டனன். இவனும் சிவராத்திரி விரதமநுட்டித்தவனாயினன் என்று கூறிக்கொண்டிருக்கை யில் சிவகணங்கள் வந்து அழைத்துக்கொண்டு சிவலோகத்திற்குச் சம்பகனை யுய்த்தனர் எனச் சிவராத்திரிச் சிறப்புச் செப்பப் பெற்றுளது. இங்ஙனமாக இப்புராணம் பல வரலாறுகளைப் பகர்வதைப் படித்தின்புறுவாராக. இந்நூல் இச் சரசுவதி மகால் நூல் நிலையப் புரவலராகப் பணி புரிந்து வரும் கௌரவக் காரியதரிசி பிரும்மஸ்ரீ S. கோபாலையர், B. A., B. L., அவர்கட்கு உரிமையாக்கு கின்றேன்.

இங்ஙனம்,

இராம. கோவிந்தசாமி பிள்ளை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவிடைமருதூர் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் இயற்றியருளிய

# திருச்சோற்றுத்துறை தலபுராணம்

(செய்யுள்)

## விநாயகர் துதி

ஞானம் பொழியு மலர்நயன நாதன் சோற்றுத் துறைப்பரமன்
தேனம் பொழியு மலரிதழிச் சிவன்மாக் கதையைத் தமிழ்செய்ய
வானம் பொழியும் புவிதழைக்க வளரா கமமா மறைவிளங்கத்
தானம் பொழியுங் கரடதடத் தந்தி முகத்தோன் சரணமலரிவாம்

பாயிரம்

## ஓதனபுரேசுவரர் துதி

நீர்கொண்ட கடல்சூழு முலகமுதற் புவனமெலா நிலாவு சோதி
ஏர்கொண்ட பரமசிவ வுல்லாச மெய்ஞ்ஞான வின்ப மாகிச்
சீர்கொண்ட பரங்கருணை யுருவாகித் தொலையாத செல்வ ராகும்
பார்கொண்ட செழுங்கீர்த்தி யோதனபு ரேசர்பதம் பணிந்து வாழ்வாம் (1)

## அன்னபூரணி துதி

மணியொளிபோற் றெளிபுனலி னிறைகுளிர்ச்சி போன்மலரின் மணம் போற்பாட
லணியிசைபோல் நறுந்தேனி னுறுசுவைபோற் பரமசிவத் தபேத மாகித்
தணிவினுமார்ப் பயிர்தழைப்பக் கருணைபொழிந் திளைப்பாற்றுந் தாயாஞ் செம்பொற்
பணியிலகு வன்னமுலை யன்னபூ ரணிமலர்த்தாள் பணிந்து வாழ்வாம் (2)

## விநாயகர் துதி

அந்திநிறத் தொந்திவயி றைந்துசெங்கை யேகதந்தத் தண்ணலீசன்
முந்துமகிழ்ந் தளித்தருளு மைந்தனுந்தி யெழுநாத முதல்வ னஞ்யாற்
புந்திதனில் வந்தனைசெய் பத்தரிடர் போகவிக போகம் வீடு
தந்தருளுந் தந்திமுகத் தெந்தையிரு பாதமலர் தலைமேற் கொள்வாம். (3)

திரு-

## சுப்பிரமணியர் துதி

ஓரானை யுமர்த்தவர்க்குச் சேயானை வானானை யுறுமார் பானை
போரானைக் கிளையானை யிளையானை நறைபரந்து பெருத நீபத்
தாரானை யாறுமுகத் தானையரு ளானைவள்ளி தனமாத் துங்கச்
சீரானை மேவுபுயச் சிலையானை மலையானைச் சிந்தை செய்வாம் (4)

## திருஞானசம்பந்தர் துதி

பரஞானக் கடல்படிந்து காழிமலை பொருந்தியமண் பதகர் என்னும்
இரவான தொழியமின்னிப் புத்தர்சிரத் திடிவீழ்த்தி யிலகுஞ் சைவ
வரமான பயிர்தழைப்ப மங்கையருக் கரசிமயில் மகிழ்ச்சிகூரத்
திரமான பதிகமழை பொழிமுகிலாங் கவுணியனைச் சிந்தை செய்வாம் (5)

## திருநாவுக்கரசர் துதி

சிலைநாணிற் பொருந்தியம்பு ரர்சிதைக்கக் கடந்தவருட் டிறத்தான் வெள்ளி
மலையாளி யென்னவிட மமுதாக்கிச் சமணிருளை மாற்றும் பானு
நிலையான கைத்தொண்டால் வாசியிலாக் காசுபெற்ற நிமலமூர்த்தி
தொலையாத பரஞான திருநாவுக் கரையனடி தொழுது வாழ்வாம் (6)

## திருநாவலூரர் துதி

திருநாவ லிடத்துதித்து நரசிங்க முனையரசைச் சேர்ந்த சைவன்
ஒருமாவி லேறிவஞ்சி மணம்புணரப் புத்தூரி லுற்றோன் வெற்பிற்
பெருமாது மகிழ்பாகன் மொழியதனாற் சங்கிலிகைப் பிடித்தவேழும்
வருஞானத் தமிழமுதக் கடலான சுந்தரனை வணங்கி வாழ்வாம் (7)

## திருவாதவூரர் துதி

முத்தநகை மரகதத்தை யிடங்கொண்ட வெள்ளைவயிர முழுநீலத்தை
வைத்தமணி கண்டனுயர் வெள்ளியிற்கோ மேதகங்கொள் வானோர்க்கெட்டாச்
சுத்தனிரு பதபுட்ப ராகமிக வந்துபெருந் துறையில் ஞானச்
சித்திபெரு பவளவாய் மாணிக்க வாசகனைச் சிந்தை செய்வாம் (8)

## சிவனடியார் துதி

ஐம்பொறிக ளெனுமரவ வாயின்வரு விடயவிட மதுமீ தூர்ந்தே
தம்புலனை யெழுவேக முடன்மயக்கத் தருட்பார்வை சார்ந்து நாளும்
இம்பர்மணி மந்திரங்க ணருந்தெனக்கண் டிகையினையைந் தெழுத்தை
நம்புமடி யவரடிகள் முடியாக நாமுடிமே னயந்து கொள்வாம். [நீற்றை

## திருவிடைமருதூர் தெற்கு மடவளாகப் ஆரப்பநாத சுவாமி துதி

உன்னுகலைக் குறைமதியும் கனல்விழியு மிளமூர னகையார்ந் திங்பந்
துன்னுகலை நிறைமதியுங் கருணைநய னமூஞான வடிவுந் தாங்கி
என்னையெழு பவக்கடலி னெடுத்துயர்ந்த அருட்கடலி லேற்ற வந்த
பன்னுபுகழ் வளர்மருதூர்ச் சிவஞான தேசிகன்றாள் பணிந்து வாழ்வாம்.

## அவையடக்கம்

(கலிவிருத்தம்)

அலையெறி யெழுகட லகலம் யாவையும்
நிலவிய பெரும்புறக் கடலி னீரெலாம்
பல துளை யுழக்கினால் அளக்கும் பான்மையாம்
இலகரன் கதையையான் இயம்ப வெண்ணலே. 11

நஞ்சமு மமுதென நயந்து பித்தனென்
றெஞ்சிய சொல்லையும் விரும்பு மீசற்கு
வஞ்சமின் மனத்தினேன் வழுத்து புன்சொலும்
செஞ்சொலே யெனத்திருச் செவிக்கு மேற்குமால், 12

எறிதிரைக் கடலுவ ரெனினுங் கங்கைநீர்
செறியின்விண் புலவரும் சிறப்பென் றாடல்போல்
அறிவிலேன் புன்சொலின் அமலன் மாக்கதை
உறைதலிற் புலவரும் உவந்து கொள்வரால். 13

பாயிரம் முற்றிற்று

## புராண வரலாறு

சீதமுற்ற சடைப்பரமற் கினியவெள்ளி மாமலைபோற் றிகிரி யேந்தும்
மாதவர்க்குப் பாற்கடற்போ னறைபரந்து மதுவொழுக மலருந் தெய்வப்
போதனுக்கு மனோவதியாந் திருநகர்போ லடற்குலிசம் பொருந்து சொர்க்க
நாதனுக்கைந் தருவனம்போல் முனிவரர்க்குச் சிறந்தபெரு நலதத தாமால். 1

அவத்தொகைக்குப் பரிகாரம் அருங்கலைக்குக் குருபீடம் அளவில் காமம்
எவற்றினுக்கும் பெரியபகை நிலமகளுக் கொருதிலகம் இடைய றாத
பவக்கடலுக் கொருதோணி யறியாமை யெனுமிருட்கோர் பானு மேன்மை
தவத்தினுக்கோ ருறையுண் முத்தி தனக்குவழி சித்தசுத்தி தான மாமால்.

மானின்முலை புலிக்குருளை வாய்மடுக்குங் கோளரியின் வயிற்று நாப்பண்
ஆனையிளந் தனிக்கன்று துயில்பயிலும் பச்சோந்தி யன்பாய் நீல
மானமணித் தோகையுடன் மருவுமெலி யுடன்பழகும் வாள ராவும்
ஈனமுறும் பகைதவிர்ந்து பிறவிலங்கும் புள்ளினமும் இனிது மேவும். 3

தந்தியினஞ் சந்தனத்தி னறுந்தழையை முறித்தடுக்கித் தனது கையால்
உந்துதுகள் மிகவிளக்கிப் புனன் முகந்து தெளித்துமண முவந்து போற்றும்
அந்திமகம் புரிவார்போல் அரணிகடைந் தழலமைக்கும் வாள ராவும்
அந்தண்மணி விளக்கேந்தும் வராகமுழு தெழும்புதலை யகற்று மாதோ. 4

சாதிமகிழ் மந்தாரை செருந்திகுருந் தாத்தியலாத் தமால மாலம்
போதியகில் சந்தனங்குங் குமங்காஞ்சி கோங்குவஞ்சி புன்னை சூதம்
பாதிரிசெண் பகம்வேங்கை செயலைமரா மரங்குரவம் பாலை தேக்குச்
சோதிமரம் வன்னிகடு நெல்லிபுரோ சுதும்பரமுஞ் சூழ்வ தாமால். 5

இத்தகைய வனநைமி சாரணிய மெனவுரைப்ப ரிதனின் ஞான
உத்தமரா கியசவுன காதிமறை முனிவரர்க ளொருங்கு மேவி
வைத்ததழற் பெருவேள்வி துடங்கிநிறை வேற்றிமன மகிழுங் காலை
வித்தகமூ வாறுபுரா ணங்களுணர் சூதமுனி விரும்பி வந்தான். 6

வந்தவனை வந்தவினை வென்றமுனி வரரெதிர்போய் வணங்கி யேத்தி
எந்தையிவன் வருகசிவ கதையமுதக் கடல்வருக வியல்வி யாதன்
சிந்தைமகிழ் முனிவருக கதிவருக சிவபத்தித் தெய்வ வல்லி
கொந்துகொடு படர்தருவே வருகவென முகமனுரை கூறி னானால் 7

கூறியபின் மாறில்பன்ன சாலையினி லாதரவிற் கொண்டு சென்றே
ஏறுமணி யாசனமிட் டதிலிருத்தி யருக்கியமு மியல்பி னீந்து
பேறுதருஞ் சிவதருமஞ் சிவகதையைச் சூழ்ந்திருந்த பெற்றி போலத்
தேறுமனத் தருந்தவர்கள் சூதனைச்சூழ்ந் திருந்தனர்கள் தெரிந்து சொல்வார் 8

செய்தவத்தின் பயனெளிதின் வெளிவந்த தெனவந்தாய் சேரா ரூர்முன்
றெய்தறித்தன் கதையமுத மெமதுசெவிப் புலனிறைத்தா யின்று முன்போற்
பொய்தவிரக் கதையின்மிகு மற்புதத்த தொருகதைநீ புகல்வா யென்ன
மெய்தளிர்த்து மயிர்சிலிர்த்து விழிமுகிழ்த்துப் பரவசமாய் விளித்துச்
சொல்வான் 9

அந்தணர்கள் எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகு மறவோ ரென்ன
வந்தமுறை விளக்குதற்கும் முறைபகர்ந்தீர் உமையம்மை மணாளன் முன்னாட்
கொந்தவிழ்பூங் கடம்பனுக்குக்கூறுவவன் சதுர்முகற்குக் கூற வந்த
அந்தணனு மென்குரவற் கருள்புரிய வவனெளியேற் கருளி னானால் 10

அக்கதைமெய்க் காந்தமதி னருட்சோற்றுத் துறைமகிமை யந்தோ வந்தோ
மிக்கரச மாகியதை மனம்பொருந்தக் கேண்மினென வியாதர் போற்றிச்
செக்கரெனச் செவந்தொளிரும் செஞ்சடில முனிவரற்குச் செய்ய சூதன்
தக்கபரி சுரைத்தனனால் அடியேனு மம்முறையைத் தமிழாற் சொல்வேன் 11

சொன்னதலம் பெருந்தீர்த்த மாகநா னத்தினொடு துலாக்கா வேரி
பன்னுபிணி மணிசேடன் கவுதமன்சூ ரியன்சுசன்மாப் பயில்கே தார
மன்னுவிர தஞ்சோம வாரபலன் சிவநிசியின் மருவு மேன்மை
என்னவிரு சருக்கமொரு பதினொன்றா லிக்கதையை யியம்பு வாமே. 12

முற்றிற்று

## நாட்டுச் சிறப்பு

*(கொச்சகக் கலிப்பா)*

சகமெனமுன் சதுர்முகத்தோன் சமைத்தநிறை பூந்தடத்தில்
திகழளைந் தருநாவற் றீபமெனும் பூங்கொடிமேற்
புகழெனுமா மணந்தினமும் பொருந்துதிசை தொறுவிரிக்குஞ்
சுகவனச வலராகுஞ் சோணாட்டின் அணிபுகல்வாம். 1

உரைத்தசைய வரைமுதலி யரங்கமட்டு மோருருவாய்
இரைத்தகருங் கடலளவு மிரண்டுருவா யிசைந்தொலிக்குஞ்
திரைத்தநதி பலகாலுஞ் செறிதலினாற் செழும்பொன்னி
நிரைத்தநில மகள்சுழுறை நாடியென நிலவுமால். 2

ஓங்குவரைப் பொலிதலினால் உமைபாகன் றனைநிகர்க்கும்
தாங்குபல வுயிர்களெலாத் தருதலிற்போ தனைநிகர்க்கும்
வாங்கியதண் கடலிடத்தின் மருவலின்மா யனைநிகர்க்கும்
தேங்கியமுத் தினங்கொழிக்குந் திரைகுலவும் புனற்பொன்னி 3

ஒருங்குவரு நாற்பாலி னொழுக்கமிகக் காட்டுதலாற்
றிருந்துபல துறைகடொறுந் தெளிவுபெற வருதலினால்
விரும்பியமுப் பொருளினையு மேதினிமேல் விளக்குதலாற்
பொருந்தியமெய்த் தேசிகரே போலுமாம் புனற்பொன்னி. 4

மணம்பொருந்து தலைவரையே மருவிவிரு மாட்சியினால்
இணங்கியநற் கற்புநிலத் தெய்தலினா லெஞ்ஞான்றும்
குணங்கிளரு மச்சநிறை கொள்கையுட னிறைதலினாற்
புணர்ந்தகுல மடந்தையரே போலுமாம் புனற்பொன்னி. 5

தண்டலையில் மலர்த்தடத்திற் றடவயலிற் குளப்பரப்பில்
மண்டுபல கானதியின் மடைவாயின் மதகுகளின்
எண்டிகழும் பொருட்பேதம் யாவையினு நிறைந்தோங்கும்
அண்டர்பிரா னருள்போல வாற்றுநீர் பரந்தனவால். 6

காவிரியின் புனல்பரந்த களமருளும் வளவயலிற்
ஆவினிலைந் துகந்தபிரான் அருள்பொருந்து மவருளம்போல்
மேவுகடி னங்கரைந்து மென்மைபுறப் பன்னிறத்த
சேவினமும் பகட்டினமும் தெரிந்தினஞ்சேர்த் தினிதுழுவார். 7

கருமுகிலின் மழைவளனுங் காவிரியின் புனல்வளனும்
இருபானு முறைவளனு நிலவளனுந் தண்டலையின்
வருவளனுஞ் செழுங்குடிகள் மனமுவந்து தினம்புரியும்
தருமவளன் பாடியுழுந் தளையொலிவான் றனையளக்கும். 8

ஆற்றன்மிக வுழுததற்பி னடல்வளவர் கடகளிறு
வேற்றுமுடி யெடுப்பதுபோல் வியனாற்று முடியெடுத்துப்
போற்றுகுல நான்கினையும் புகழரசர் நடுவதுபோல்
நாற்றுநடுங் கடைசியர்கள் நலங்குலவும் வயலெங்கும். 9

நற்குலத்துப் பிறந்தவரை நலிவுசெய்யு முட்பகையை
அற்புடைமைக் கேளிரின மறிந்துகளைந் தெனப்பயிருள்
உற்பவித்த மலர்க்கணையை யொளிமுறுவற் கடைசியர்கள்
பொற்கரத்துக் களைந்துகளை பொருந்துவர்கள் முதல்வியர்ப்ப 10

கட்டகளை மலர்பொழிதேன் கால்பரந்து மதகுதொறும்
இட்டபல கையுமகற்றி யெப்பாலு நிறைபுனலை
பொட்டுநுத லுழத்தியர்கள் பூந்துவர்வாய் மடுத்தருந்தி
மட்டவிழும் புனற்சுவைதான் மதுரமெனப் பகர்ந்திடுவார், 11

அம்புயத்து மதுவருந்தி யவசமுற வருங்களமர்
தம்புயத்து முலைதிளைப்பத் தழுவியுறை மலர்ச்சோலைக்
கம்புயத்தோன் பலவடிவாய்க் கவின்பொதுவர் மாதர்பலர்
செம்பணைத்தோ டழுவியுறுஞ் செழுஞ்சோலை யெனத்திகழும். 12

உத்தமர்தங் கரதலத்தி லுதவியநற் றானமென்
மெத்தியசெஞ் சாலியின மிகச்செழித்துப் பணைத்தோங்கிச்
சுத்தநறும் பாலனைய கருவிருந்து சூன்முதிர்ந்து
வைத்தமர கதப்பசுமை வாய்ந்துகதி ரீன்றனவால். 13

ஈன்றகதிர் பலவிதமா யேய்ந்தமிகு புலன்கடொறும்
ஆன்றபல பொறிகளென வளர்ந்துபல கலையுணர்ந்தான்
ஏன்றவறி வுளநிரம்பு மியல்பெனப்பா னனிபரந்து
தோன்றுபரி முகங்காட்டி விளைந்தனநெற் கதிர்த்தொகுதி. 14

விளைந்தகதிர் கண்டுழவர் விண்ணவர்கோன் றணைப்பரவி
வளைந்தகொடு வாட்பூட்டி யரிந்தரிகள் வகைவகையாய்
அளந்தறிதற் கருஞ்சுமைக ளாக்கினர்கள் கொடுபோந்து
களந்தனிற்சேர்த் துயர்வரைபோற் கதிர்ப்போர்கள் பலவமைத்தார். 15

ஆற்றியபோர் பரித்துவிரித் தடற்பகடுங் கடுநடைய
ஏற்றினமும் வலமுறையா லினிதுநடத்தினர் வைக்கோல்
மாற்றியபின் மாருதந்தான் வழங்குவழி பதர்போகத்
தூற்றினர்கள் பழுதகற்றிச் சொற்காணும் புலவரைப்போல். 16

நல்லநவ மணிவரைபோ னவையகலும் படிதூற்றி
நெல்லின்வகைத் தனித்தனியே நிறைபொருந்நக் குவைபாக்கி
அல்லலகற் றிடுமரசர்க் காறிலொன் றீந் தேனையகொண்
டில்லறத்திற் கியம்புமுறை யியற்றுவர்கள் இயல்பாக, 17

பயிலுவன வறநெறிகள் மாளிகையின் பாங்கரெலாம்
அயிலுவன விருந்தினங்கள் ஆய்வனவா கமப்பொருள்கள்
குயிலனமென் மொழிமாதர் குலவுமணி யாபரண
வெயிலனவீ திகணிலவும் வியனகரம் பலவுளவால். 18

அளியினங்கள் முரல்சோலை யகலமெலா மருமறைநூல்
கிளியினங்கள் விரித்துரைக்கப் பூவையினங் கேட்டுருகும்
தெளிபளிங்கி னிறம்படைத்த செழும்புனற்பூந் தடந்துறையில்
ஒளிவிளங்கு நகைமாத ருடனாடு மோதிமங்கள். 19

## வேறு

### (கலிவிருத்தம்)

தெறுகயல் பாய்ந்திடத் தீம்ப லாவினில்
யுறுகனி யுடைந்துபொற் சுளையு குப்பண
மிறைபுரி யரசரை வேந்தொ றுத்திட
திறையெனப் பொதிநிதி யளிக்குஞ் செய்கைபோல் 20

வாவின வாளைகள் வாய்ந்த சோலையிற்
றாவிமென் மலர்த்துகள் சார்ந்து மேற்செலன்
மேவிய மகத்தொழின் முடித்த வேதியர்
தேவுடல் கொண்டுவிண் சேறல் போலுமால். 21

கயலின நறைவிரி கமலப் போதினில்
இயல்பொடு பிறழ்வன இளைஞர் சிந்தையின்
மயலுறப் பொருள்விலை மாதர் வாண்முகம்
பயினமர் விழிபிறழ் பான்மை போலுமால். 22

கோங்கலர் நீலஞ்செய் குன்றின் மீநசைந்
தாங்குபொன் னிறமுற வதனி னாவலந்
தீங்கனி பொருந்தல்பொன் னுரைத்துச் செட்டிகள்
ஓங்கிய மெழுகினி லொற்ற லொக்குமே. 23

அருவியி னிலகிய வார மாலைகள்
மருவிய தமனிய மாளி கைக்குலங்
கிரியென மிளிர்வன கேக யங்கள்போற்
பரிவுட னினிதவண் இருப்பர் பாவையார், 24

நரந்தமு னூறுசெய் நாளி கேரத்திற்
பொருந்தின நீரின்மேற் பூகப் பாளைகள்
விரிந்துறல் காமுகர் வடுச்செய் வெம்முலை
வருங்கணி கையர்துகின் மறைத்தல் மானுமே, 25

பலகுழு வுட்பகைப் பசிய றாப்பிணி
கொலைபுரி புறப்பகை குறும்பு மில்லையாய்
நிலவிய விளையுளு நீடு செல்வமும்
உலகிய லறிஞர்தங் குழுவு யோங்குமால். 26

வருபுன லேரிகள் வாவி கூபங்கள்
இருநில வுயிர்புக லெய்து மூதெயில்
அருள்புரி மாமட மன்ன சத்திரம்
திருமலி யாலயஞ் சிவணு மூர்தொறும். 27

பூதிசா தனங்கண்மெய்ப் பொருளென் றெண்ணுவார்
ஓதுமைந் தெழுத்தினை யன்றி யோதிடார்
மாதுபா கனைத்தின மனத்தி னுன்னுவார்
நீதியி னிற்பரின் னிலத்து மாந்தரே. 28

தேவெனக் கொழுநரைச் சிந்தை செய்தவர்
ஏவலி னியற்றுவர் தருமம் யாவையும்
மேவுநாற் குணநிறை விருந்து போற்றுதல்
ஓவிலா வணியென வுவப்பர் மங்கைமார். 29

உறுபொருள் பரிசில ருவப்ப நல்கியே
பெறுபுக ழுலகினி னிறுவிப் பெட்புறு
பொறுமையு மொழுக்கமுங் குலமும் போற்றிடும்
மறுமறு வள்ளியோர் வாழ்க்கை மன்னுமே. 30

கன்னலும் பனசமும் கமுகும் வாழையும்
செந்நெலும் காடெனத் திகழு மெங்கணும்
அன்னமுஞ் சொன்னமும் அணியும் ஆடையும்
பன்னெடுங் கிரியெனப் பல்கு மெங்கணும். 31

தண்டலை மலர்பொழிற் றண்ணந் தேன்மழை
அண்டர்கள் பொழிதரு மலர்ந்த பூமழை
உண்டென வள்ளியோ ருதவு பொன்மழை
கொண்டலின் மழையொடு குலாவு மெங்கணும். 32

வாரண வொலிபரி மாவின் சீரொலி
காரணன் விழாவொலி கமலன் இந்திரன்
நாரணன் பரமனைப் புகழு நல்லொலி
ஆரண வொலியுட னமரு மெங்கணும். 33

போற்றிய வேள்வியிற் புரிந்த பேரொளி
தோற்றுமா மணியொளி சுடரும் பூணொளி
ஏற்றிய விளக்கொளி யிலங்கு ஞாங்கர்வெண்
ணீற்றொளி யொடுதின நிலவு மெங்கணும். 34

மன்னுமிப் பெருவள மெவையும் வாரிசூழ்
என்னில வளங்களு மிதனுண் மேலான்
தன்னில நாடெனு நாடெ வற்றினும்
பொன்னிநன் னாட்டணி பொலிவு பெற்றதே.

நாட்டுச் சிறப்பு முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

## நகரச் சிறப்பு

தோற்றியெய் நீதிபெறு சோழவள நாட்டிற்
றேற்றமிகு பொன்னியுயர் தென்கரையின் மன்னி
ஆற்றல்செறி பஞ்சநதி யூர்க்கணிய தாகும்
போற்றுபுக ழோதன புரத்தினணி சொல்வாம். 1

தூமணி தருக்குலவு சொர்க்க நகரென்றே
பூமியென லன்றிவளர் புண்ணிய மியற்றும்
வாமநிறை பூதலமு மாகுமென வாழ்த்தும்
ஏமமுடன் வந்தவ ணிருந்தனைய திவ்வூர். 2

நம்புதன தன்றினமும் நாதனை வணங்க
செம்பொனள கைக்குளுயர் திண்கைலை தன்னை
உம்பர்தொழ வைத்ததென வோதனபுரத்துள்
அம்பிகை மணாளனுறை யாலய மிலங்கும். 3

ஆலய நெடும்புரிசை யாடக முகப்பின்
மாலயனு மிந்திரனும் வந்துபொழி கின்ற
கோலமலி பொற்றருவி னற்றுணர் குலாவிச்
சாலுமக மேருவி னுயர்ந்தொளி தயங்கும். 4

சென்றுமணி மன்னர்முடி தேவர்மகுடங்கள்
ஒன்றினுட னொன்றினி துரிஞ்சவுதிர் பொற்றூள்
அன்றலகின் மாற்றியரு ளன்பர்புற முய்ப்ப
குன்றென விளங்குவன கொண்டல்குடி கொள்ள. ௫

மோதுமலை வாவியின் முயன்றெழுவ ரான்மீன்
மேதிமடி மோதவரு பான்மடையின் மேவி
போதமிகு கங்கைநதி போற்கழனி புக்கு
மீதெழு பயிர்த்தொகை விளைந்திட வளர்க்கும். 6

ஆதிமறை யோதிமக மாற்றிமிகு தானம்
ஓதும்வகை செய்திவை பிறர்க்கு முறுவித்துக்
காதல்சிவ னார்சரண கஞ்சமிசை வைக்கும்
வேதியர்கள் மேவியுறை வீதிகள் விளங்கும். 7

உன்னுமுயிர் யாவையு முவக்கும்வகை தந்நம்
மின்னிரதம் பாய்புரவி மேதகைய வேழம்
மின்னிவர் படைக்கல வினைத்தொழில்கள் கற்கும்
மன்னவர்கள் வீதிபல மன்னுமவண் மாதோ. 8

தம்பொருளி னேனையர் தரும்பொருளை யெண்ணி
நம்புமணி யாடைபணி நற்பொருள்கள் விற்றும்
அம்புவி கிளைத்துமுய ரானிரை புரந்தும்
செம்பொன்மிகு மாவசியர் வீதிபல சேரும். 9

சீர்குலவு சைவமுறை செப்புநெறி செய்தே
ஏர்தரும் வளப்பொருள் எவர்க்குநனி நல்கி
ஆர்வநிறை வாய்மைபொறை யானகலை கற்கும்
பார்மகள் பெறும்புதல்வர் வீதிபல பாங்கர். 10

அன்னமலி சாலையி னணைந்தவ ரெவர்க்கும்
செந்நெலடி சிற்கறிநெய் தீங்கனி கொழும்பால் (செழும்பால்)
கன்னலொடு பூபவகை கண்டினிய செந்தேன்
இன்னமுத நன்னய மியம்பியிசை விப்பார். 11

ஈசனடி யாரையெதிர் கொண்டுமனை யெய்தி
வாசநிறை நீர்கொடு மலர்ப்பதம் விளக்கிப்
பூசனைபு ரிந்தினிய போனகமு நல்கிப்
பேசுதுதி செய்துடல் பெறும்பயனி தென்பார். 12

வீதிக ணறுந்துகள் விளக்கியதன் மீதே
சீதநறு மென்புன றெளித்தலர் விரிப்பார்
சோதிமணி வேதிகை தொறும்புழுகு நீவிப்
போதுமலி வாசநிறை பொற்குட நிறைப்பார், 13

கன்னல்கமு கங்கதலி கந்தமலர் மாலை
துன்னுகொடி மாமகர தோரண நிரைப்பார்
மின்னுசுட ரோவியம் விதானமு மமைப்பார்
சின்மயன் விழாவணிக ளின்னபல செய்வார். 14

செங்கைவளை யோலிட வெயர்த்துளிகள் சிந்தத்
தொங்கலசை யக்குழல்கள் சோரவதி பாரக்
கொங்கைகள் குலுங்கமணி வாய்மழலை கொஞ்ச
மங்கையர்கள் பந்துவினை யாடுவன மாடம். 15

மாகனக மேடைமிசை மன்னுமெழில் பெற்ற
கோகனகை போன்மருவு கோதைமட வார்கள்
பாகனைய தந்திரி விபஞ்சி பயிலோசை
ஒகையுறு கின்னரர்தம் முள்ளமு மயக்கும். 16

ஆனமக முற்றிவரு மந்தணர் தடந்தேர்
தானவினை செய்தரசர் ஏறிவரு தந்தி
யீனமி லமைச்சரின மேறிவரும் வாசி
வானவர்கள் ஊர்தியொடு வீதியின் மயங்கும். 17

மேடைமிசை மைப்புயலை வேறுபிடி யென்றே
ஆடல்மத வெங்களிறணைக்க முகிலார்க்கும்
நீருமொலி யஞ்சிமட வார்புலவி நீங்கி
ஓடிமண வாளர்புய முற்றுற வணைப்பார். 18

செஞ்சொன்மறை வேள்விவிதி செய்யுமொலி யோர்பால்
அஞ்சனவி ழிக்கொடிகள் ஆடலொலி யோர்பால்
பஞ்சரம டக்கிளிகள் பாடலொலி யோர்பால்
விஞ்சையர் கலைப்பொருள்வி திக்குமொலி யோர்பால். 19

அட்டிலெழு குய்ப்புகை யகிற்புகை மகத்தின்
மட்டெழுந றும்புகை கரும்பினில் வருஞ்சா(று)
இட்டமுறு பாகுபட விட்டபுகை கூடி
தொட்டகட லுண்டமுகில் போன்றுதிசை சூழும். 20

மன்றல்வினை யெங்குமணி வாய்மழலை மைந்தர்
முன்றிலிடை யெங்குமண மொய்ம்பரொடு மாதர்
அன்றிலென மேவுபரி யங்கமனை யெங்கும்
தென்றலுல வும்புதிய தெற்றிநிறை யெங்கும். 21

பாதபமு மேதகைய பத்தியொடு மேவுஞ்
சாதிமருண் மாவுமுயர் தானமிகு வாற்றும்
வாதுபுரி கந்துகமு மந்திரம்வி ளங்கும்
சீதமலி காவுமகிழ் செய்யபல நல்கும். 22

மங்குலிரு ளேயிரவு மன்னிமெழின் மாதர்
கொங்கையிணை யேபெருகு வன்மையொடு கூடும்
தங்குமிடை யேதினமு மின்மையொடு சாரும்
அங்கோர்புத லேகளவெ னப்படுத லந்தோ. 23

மன்னிவளர் கோகனக வாசமல ராளும்
அன்னமிடு மண்டநிரை யாளும்மக மீதிற்
பன்னுபல நூலொடுப யின்றுறையு மென்றாற்
றொன்னக ரிதன்பெருமை சொல்லவெவர் வல்லார். 24

நகரச்சிறப்பு முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

## தலச் சருக்கம்

பொன்னம் பொறிவண் டினம்பருகும் பூந்தேன் பொழியுஞ் செழுஞ்சோலை
மன்னும் புகழோ தனபுரியுன் மகிமை முழுது மியம்ப வெனில்
அன்ன முயர்த்த கடவுளுக்கு மடங்கா தெளியே னியன்றவண்ம்
மின்னுஞ் சடில முனிவரர்காள் விரிப்பா மெனச்சூ தனு முரைப்பான்(ம்)

கண்ணன் முதலாம் விண்ணவர்கள் கனிந்து பணிந்து மகிழ்ந்துஏத்த
அண்ணலுமையா ளிடன்கைலை யரியா சனத்தி னினி திருப்ப
வண்ண மணிமா மயிலுயர்த்த வள்ளிமணாளன் வணங்கி யென(து)
எண்ண நிரம்பும் வகையருளி னியம்ப வேண்டு மெனத்துதித்து. 2

உலகின் மனிதர் பாவித முருற்றி நரகிற் கிடந்தபினும்
சிலபுள் மரங்கள் புழுவிலங்காய்ச் செனித்தும் வறியராய்ச்செனித்தும்
கலக வினைகள் செய்துகதி காணா துழல்வார் விரைந்தெளிதின்
இலகு கதிசே ருபாயமுரை யென்ன வரன்சொல் கதையிதுவே. 3

காலந் தவறாக் காவிரித்தென் கரைக்க ணாளும் விளங்கிவியன்
ஞாலங் குலவும் புகழ்ப்பஞ்ச நதத்திற் கணித்தா நாடோறும்
ஏலும் பெருமைப் பூந்துருத்திக் கினிய கிழக்கி னிலங்குவது
சூலந் தரித்த சிவன்விரும்புஞ் சோற்றுத் துறையாம் புகழ் நகரம். 4

அனாதி யாகிப் பரிசுத்த மாகி யெவர்க்கு முத்திதனை
மனாதி வருந்தா தளிப்பதனால் வரமார் முத்திட் சேத்திரமாய்
வினாவு தலங்கள் எவற்றினுக்கும் மிகுமுத் தமமா மப்பதிதான்
இனாத பிறவிப் பெருங்கடல்விட் டேற்றுந் தோணி யெனத்தகுமால் 5

நாடு புகழ்பார்ப் பதிநகர நயந்த வன்னா வதரண்மே
சேட புரிபாற் கரபுரியே சிறந்த கவுத மேசமுதற்
பாட வினிய பலபெயருப் படைத்துத் தினமுஞ் சிறந்தோங்கும்
ஆடல் புரியும் சிவன்விரும்பி யாளும் சோற்றுத் துறைநகரம். 6

இரைக்குங் கடல்சூழ் புவியி . த்தோ ரியர்வ ரேனும் தேவர்களும்
உரைக்கும் புகழோ தனபுரியி லொருவா தொருநாள் வசிப்போர்கள்
விரைக்கற் பகப்பூ நறுநிழலில் விண்ணோர் பரவ வீற்றிருந்து
விரைக்குங் குமப்பூண் முலைமடந்தை வாம பாக னருள்பெறுவார், 7

அவ்வூர் வழியாய் நடந்தாலும் அதன்பேர் பலவு மிசைத்தாலும்
எவ்வூ ரன்ன புரியென்வே யிசைத்தார்க் கிதுவென் றியம்பிடினும்
செவ்வூ ரதனைக் கண்களிக்கத் தெரிசித் துவகை திளைத்தாலும்
வெவ்வூழ் வினையின் வலைத்தொடக்கை விடுப்பார் நமனைத் தடுப்பாரால் 8

சாற்றுந் தலத்துத் தவம்வேள்வித் தான மேனைப் புண்ணியங்கள்
போற்றுந் திறத்தோ ரணுவளவு புரிந்தான் மகமே ருவினோங்கி
யாற்றும் பலன்க ளனந்தமென வண்ண லுமைபாட் கருள்பொழுது
தோற்று மகிழ்ச்சிப் பெருகயில்வேற் றோன்றற் கலது தோன்றாவால். 9

எட்டு விதமாஞ் சித்திகளு மியல்பா மிட்ட சித்திகளும்
மட்டு விரியும் பசுந்துளப மாயன் பதவி முதலாக
அட்ட திசையோர் பதவிகளு மட்ட மூர்த்தி யருளுலகுந்
தட்டில் பரம முத்தியுமத் தலமே கொடுக்கு மிதுசரதம். 10

பேசும் பெருமை மிகச்சிறந்த பெருமான் விரும்போ தன புரிபின்
மாசு தவிர்ந்து நனிதெளிந்த மதியோர் வசிக்க நினைப்பார்கள்
ஆசு பொருந்தா வருந்தவத்தீர் அவ்வூர் நினையார் தமைநினைக்க
கூசு மெமது மனமெனவே குரவ னுரைத்தா னநுபவமே. 11

பூத பசாசத் துறுதுயரும் புகல்வஞ் சனையால் வருதுயரும்
ஓது மகாபா தகத்திறனும் முப்பாதகத்தின் றிறமனைத்தும்
தீது புனைசொற் பனம்வறுமைத் திறமுஞ் சமபா தகத்திறனும்
பேத முறு தீ வினைத்திறங்கள் பிறவுந் தீர்க்குந் தலமிதுவே. 12

நிலத்து மனித ரறியாம னிகழ்த்தும் வினையைப் பரிகாரம்
விலக்கு மறிந்து புரிவினையை விலக்காக் கோடி பிறப்பினுமித்
தலத்தி லறிந்து மறியாதுஞ் சாலப் புரியும் வினையெல்லாம்
இலக்கு பருதி முனமிருள்போ லேகு மேகு மிதுசரதம். 13

காமம் வெகுளி மோகமதங் கடிய லோப மாற்சரியம்
ஏம முறுகோள் பரநிந்தை யின்ப முறுந்தீ யவரெனினும்
சோமச் சடில சிவன்மகிழும் சோற்றுந் துறையிற் சேர்வரெனிற்
சேம நிதியா முத்திநலஞ் சேர்வார் பிறவிக் கடற்சேரார். 14

தாரந் தனயர் மனைநிலங்க டனதா னியநித் தியமென்று
பேரம் புவியின் மயங்குநரும் பெருமான் சோற்றுத் துறைசேரிற்
சாரங் கனிந்த சுகமுத்தி சார்வாரினைய தலஞ் சாரார்
வாரம் பெறப்பொற் கொழுப்பூட்டி வரகுக் குழுவார் தமையொப்பார். 15

கண்ணு மயங்கி மயிர்நரைத்துக் காதுங் கேளா தறிவுமிழந்(து)
உண்ணும் பதமும் வெறுப்பதன்முன் னுடலுந் திருவு நிலையிலையென்(று)
எண்ணி யினிய போகமுற்றி யெய்த வேண்டி யித்தலத்தின்
நண்ணு வார்க ளறிவுடையார் நண்ணார் நரகத் தொருநாளும். 16

யாகந் தீர்த்த யாத்திரைக ளினிய தவங்க டானமுதல்
ஆகுந் தருமம் புரிந்துபயன் அடைதற் கரிதாய் கலியுகத்தில்
சோகந் தவிர்ந்த பெருந்தவத்திற் சோற்றுத் துறையி லிவைபுரிந்தார்
பாகம் பொருந்து பயன்மிகவும் பலிக்கும் கலிக்கும் பயமிலையால், 17

பண்ணார் மொழியால் அரமகளிர் பாடு மமுதஞ் செவிபருக
விண்ணோ ராகிச் செம்மாந்து விரைக்கற் பகப்பூ நீழிலிருந்து
நண்ணா வசுரப் பகைதொலைத்து நாளும் மகிழும் வாழ்வினுமந்
தண்ணார் சோற்றுத் துறையிலொரு தருவாய்ப் பிறத்தன் மிகவினிதால். 18

அந்தத் தலத்தோர் துயில்வதெலாம் அரிய சமாதி யெனத்தகுமால்
அந்தத் தலத்தோ ரெவற்றைநினைந் தாலுமரிய திபானமதாம்
அந்தத் தலத்தோ ரெவற்றையுரைத் தாலு மறைக ளோதுதலாம்
அந்தத் தலத்தோ ரெங்ஙனடந் தாலுந் தீர்த்த யாத்திரையே, 19

அப்பொற் பதியோ ரேதுபுரிந் தாலும் பெரிய தவமாகும்
அப்பொற் பதியோர் நுகர்தலெலாம் அமைத்த வேள்விச் செயலாகும்
அப்பொற் பதியே சிவலோகம் ஆகு மென்னி லத்தலத்தில்
இப்பெற் றியினை யெடுத்தெவ்வா றிசைப்ப ரிசைப்பா வாலம்மா 20

ஆன தலத்தைத் தெரிசித்தோர்க் காகு ஞானம் போகமெனில்
ஞான மயமாய் நித்தியமாய் நாத முடிவாய்ப் பரசுகமாய்
மோன முடிவா யருள்வடிவாய் முகுந்த னறியா மூர்த்தியையித்
தான மதனிற் றெரிசித்தோர் சாரும் பயனுக் களவுண்டோ. 21

வெள்ளை மதிய நதிபுனைந்த விமலன் விரும்போ தனபுரியின்
உள்ள மகிழ்வா லொருபிடிசோ றொருவர்க் களிப்போர் வேதமெலாம்
தெள்ளி யுரைத்த பேரறிவிற் றிருமா மறையோ ராயிரம்பேர்க்
கொள்ள வாறு சுவையடிசில் கொடுத்த பயனைப் பெறுவாரே. 22

வேத மருளுந் தேவேசர் விபன்கா விரிவில் லவநாதர்
ஆதி கவுத மேசர்வரம் அருளு மர்த்த நாரீசர்
சோதி தரும்பாற் கரநாதர் தொலையாச் செல்வர் நாகீசர்
ஓது மொப்பி லாதவரும் ஓத னேசர் பெயராமால். 23

சொல்லு மினிய பெய ரெவையுந் துயிலும் பொழுதும் யாத்திரையாய்
செல்லும் பொழுதும் நோயுடலிற் சேரும் பொழுது முரைத்தவர்பால்
ஒல்லுங் கொடிய வினையனைத்து மொழியுஞ் சினத்தபகை தொகையை
வெல்லுந் திடமு நினைத்தனவு மேவுஞ்சரத மிது சரதம். 24

ஆகத் திருவிருத்தம் 108

தலச் சருக்கம் முற்றிற்று

## தீர்த்தச் சருக்கம்

கருது தலத்தின் பெருமையிது காமம் வெகுளி களைப்போக்கி
யுருகு கருணைப் புனல்பாய்ச்சி யுயர்மா தவமாம் பயிராக்கி
பருக வினிய சுகமுத்தி பலனை நுகரு முனிவரர்காள்
மருவு புகழோ தனபுரியின் வருகா விரிமான் மியமுரைப்பாம். 1

கோடி பலவாம் பெருந்தனத்தக் குலத்தின் மிகவுஞ் சிறந்திருக்கும்
ஆடி வருபற் பலதீர்த்த மளிக்கும் பயனை யொருங்களிக்கும்
கூடி யொருகான் மூழ்கினர்தம் கொடிய சென்ம வினையகற்றும்
தேடி யொருதே சத்திருந்து சிந்தை செயினுஞ் சிறப்பருளும். 2

அறிவும் பொறையும் விதரணமும் அருளும் புகழும் அருங்கதியும்
நெறியுந் திருவும் ஒப்புரவும் நிதியுங் குணனும் நீதிகளும்
செறியுந் தவமுங் கல்வியுந்தந் திரமும் வரமும் மந்திரமும்
பொறியுஞ் செயமு மிகவுளவாம் பொன்னி நிதிநீ ராடுநர்க்கே, 3

வறுமை தவிரும் பிணிதணியும் மதமும் கதமும் மடமையும் போம்
கறுவு பகையுஞ் சஞ்சலமு மங் கவலை முழுதுங் கடிதகலும்
குறுகு மலகை பூதபயங் குறுகா கொடிய வினைதொலையும்
மிறுகு நிரயத் துயர்நீங்கும் வருகா விரிநீர் மூழ்கினர்க்கே. 4

அம்பொற் றருவி னறுநீழ லரியா சனமும் அளிமுரலும்
வம்புற் றிடுதா மரைத்தவிசும் வாரி யகிலம் படைத்தேந்தும்
விம்பச் சுடிகைப் பணியணையும் மேவி யிருப்பார் விருப்பாகி
உம்பர்க் கரிய கைலையினு முறைவார் நிறைகா விரிபடிவார். 5

அந்த நதியை வணங்கினர்கள் அலர்செங் கமல வணங்கினர்கள்
அந்த நதியைத் துதித்தவர்கள் அவல மருவா துதித்தவர்கள்
அந்த நதியைக் கண்டவர்கள் அணிய துயருக் கண்டார்கள்
அந்த நதிப்பேர் பகர்ந்திடுவ ரளவில் செனன மகன்றிடுவார். 6

அந்நீ ரெடுத்த கரத்தினர்க ளகிலம் விளங்குங் கரத்தினர்கள்
அந்நீர் தினமு மருந்தினர்க ளயர்வு தவிர்க்கு மருந்தினர்கள்
அந்நீர்க் கரையினிருந் தவர்கள் அறிவு முதிரு மிருந்தவர்கள்
அந்நீர் வாடை முகந்தவரே யழியா வின்ப முகந்தவரே. 7

பொன்னைக் கவர்ந்தார் பிரமகத்தி புரிவார் மதுவை நுகர்ந்தவர்கள்
முன்னைக் குரவன் மனைவிதனை முயங்கு மவரிங் கிவர்களுடன்
மன்னிப் பயில்வா ரெனுமைந்து மாபா தகருங் காவிரியின்
உன்னிப் படியி னவ்வினையை யுருப்பார் கதியி னிருப்பாரே. 8

கொடிய வுபபா தகத்திறனுங் கூறுஞ் சம்பா தகமனைத்தும்
ஒடிவில் வருண வாச்சிரம வொழுக்க வழுக்குந் தீவினையும்
படியில் வருபாத் திரமல்லார் பாலிற தானம் புரிபழுதும்
மடிவி லேனைப் பாவமும்போம் வருகா விரிநீ ராடுநர்க்கே. 9

மாதப் பிறப்பு பன்னிரண்டு மருவு மமாவா சிகளெவையும்
காதற் பருவ மீராறும் கருது மாதந் தோறும்வரும்
தீதற் விடுபஞ் சமியேகா தசியு மினிய துவாதசியும்
கோதற் றிடுநற் கெசச்சாயையு (கோட்சாயை) குளிர்மார் கழி நாண் முப்பானும் 10

அருக்கன் பூசத் திருவோணம் அத்த முயர்திங் களினோணம்
பெருக்குஞ் செவ்வா யசுபதி சீர் பேசு புதன்ரோ கணியநுடம்
விருப்ப மருவு மசுபதிநாள் வியனட் டமியும் வியாழத்திற்
பருத்த வத்தம் வெள்ளியிரே வதியே ரத்த மட்டமியும். 11

சனிரோ கணியு மசுபதியுஞ் சாற்றுங் கிரண மோரிரண்டும்
நனிவை திருதி விதிபாத நண்ணு முகாதி மனுவாதி
மனுகார்த் திகைஞா யிற்றினுடன் மற்றை மாத ஞாயிறெலாம்
உனுமா ளயமாம் பக்கமகா வுதய மர்த்தோ தையமிவையும். 12

எடுத்து மொழியுத் தமதினயாம் இவற்றி னியலோ தனபுரத்தின்
அடுத்து வருகா விரியாடி யரனைப் பணிவார் யாரேனும்
தடுப்பில் வினைபோய்ச் சாமீபம் சார்வார் சிவனுக் கிரும்பொருள்கள்
தொடுத்த மணிமா லைகள் பணிகள் சுரபி யாதி கொடுப்பவரும். 13

தோற்று மறையந் தணர்தமக்குச் சுரபி யசுவங் கெசம்பூமி
போற்று திலங்கன் னிகைதானம் புரிநூ லணியு முபநயனம்
தேற்ற மிகவும் புரிவார்க்குத் தீர்த்த மியாவுந் தருபலனும்
ஏற்ற மருவும் யாகமெலா மியற்றும் பலனுஞ் சிவதலத்தின். 14

வரு சோடசமா தானமெலாம் வழங்கும் பலனு முளவாகும்
தெருள்செய் பிதிர்மா திருதினத்திற் சிரார்த்தந் தணையித் தலப் பொன்னி
கரையினி யியற்றிற் பிதிர்க்களெல்லாங் கதியை படைவார் அவர்குலத்தில்
வெருவும் வறுமை யிலதாகும் மிகுமுத் தமமைந் தரைப் பெறுவார், 15

இகலும் பாவம் பருதிமுன மிருள்போ லகலும் இனியசிவன்
மிகவும் அவர்பாற் கருணைசெயும் வியன்முத் தியுமங் கவர் பெறுவார்
புகலும் பெரிய விப்பலன்கள் பொருந்து மூகம னன்றேற்றிற்
பகவ ரறிய கலியுகத்திற் பலிக்கு மிதுநிச் சயமாமே. 16

வேறு

தேடு கின்ற நிதிகளுஞ் சிறந்த கல்வி யாவையுங்
கூடு நல்லொ ழுக்கமுங்கொள் குடிகள்மேவு கொடிநகர்
நீடு தேவ லோகமென்ன நிலைமையாமோர் நகர்தனில்
நாடு செம்பொன் வசியர் தங்கள் நற்குலத்தோர் சம்பகன். 17

வனச மங்கை யனையகாந்தி மதியை வேட்டு மானிலத்
தனக யான வில்லறஞ்செய் தன்புமேவி வாழுநாட்
சினமிலாச் சுசீலனுந்துர்ச் சீலனுந்தன் மைந்தராய்
இனியவாரி யமுதுநஞ்சு மீன்றதென்ன வீன்றனன். 18

இருவரான மைந்தர் தம்மை யீன்றதானாத சம்பகன்
பெருமை வாணிகம் புரிந்து பெருகுமைந்து கோடிபொன்
கருதி யீட்டி நல்லபூமி கன்றுகாலி முதலெலாம்
மருவியின்ப முற்று முற்றும் வயதுமெய்ப தானபின். 19

நரைமுதிர்ந்து காலயர்ந்து நடைதவிர்ந்து தண்டுகொண்
டுரைதளர்ந்து மறவிசால வுற்றசத்த னாகியே
கரைதவிர்ந்த செல்வமைந்தர் கன்றுகாலி மனைவியை
புரைதவிர்ந்த காதலோடு புரத்தல் செய்குவாரிலை. 20

யாதுசெய்வ தென்றுநெஞ்சி ரங்கிமாழ்கும் வேலையில்
மாதுபாக ரருளின்முன்ன மன்னு புண்ணியத்தினான்
ஓதுஞானம் வந்துமேவ வுறுகணொன்று மின்றியே
தீதுதீரு மாறுமாறில் சிந்தையொடு செப்புவான். 21

திவச மொன்றி லேனுமாதி தேவர்பூசை செய்திலேன்
நவசொருப சுகவிலாச நாதர்நாம மோதிலேன்
புவனமீதில் கோயில்கோபு ரங்கள்சோதி மண்டபம்
தவநிலாவு புரிசைவாவி சாலைசோலை செய்திலேன். 22

விப்பிராதி யமலனன்பர் வேண்டும் வண்ணம் நுகரவே
இப்புவிக்கண் ணன்னதான மினியதாக வுதவிலேன்
ஒப்பிலாத புனலருந்த வுதவுபந்தர் செய்திலேன்
றப்பிலாத நிரையவாதை தள்ளுமா றதெங்ஙனே. 23

போன செய்கை யெண்ணிநெஞ்சு புண்பொருந்தி யாவதென்
ஈனம்யாது மின்றிமுன்ன மீட்டிவைத்த நிதிகளுள்
ஆனவேத மோதுமீசன் அன்பரந்த ணர்க்கெலாம்
தானமாயி ரண்டுகோடி தமனியங்க ளீந்தனன். 24

காதன்மைந்த ரிருவருக்கி ரண்டு கோடி கனகமும்
போதநல்கி நின்றகோடி பொன்னைநான நீவுகார்
ஓதிமைக்கண் மனைவிகொள்ள வுதவிநல்ல சம்பகன்
மாதவத்தின் மனைவி பின்னர் வரநடந்து வந்தரோ. 25

கரத்தினெல்லி போலநல்ல கதிகொடுக்கு மோதன
புரத்தின்மன்னி யன்னமல்கு பொன்னிமூழ்கி வந்துபின்
சிரத்தையாக மாதுபாகர் சேவைசெய்து ஞானமா
நிருத்தருக்கு நூறுபத்து நிதியமுள்ள துதவியே. 26

பண்ணுவந்த னைத்திறங்கள் பலபுரிந்து பாங்கோர்பார்
நண்ணியீச னார்தியான நன்மையோடு கூடியே
கண்ணுறங்கு போது நல்ல கதி பொருந்து சம்பகன்
எண்ணு நாளு வந்து காய மினிது நீங்கி னானரோ. 27

பரவுகேள்வன் ஆவிநீத்த பான்மைபாரி காண்டலும்
மரணமாக வேதுணிந்து மருவுகாய நீக்கினாள்
விரவுகாத லிருவரும் பொன் மேவிமான மூர்ந்துசந்
திரனுலாவு நதியணிந்த சிவனுலக மெய்தினார். 28

பொன்னி மூழ்கி யீரைஞ்ஞூறு பொன்னை முக்க ணம்பனுக்
குன்னி நல்கு புண்ணியத்தி னுயர்ந்த லோக மெய்தினார்
இன்ன தாதை தாயிறந்த வியல்புணர்ந்த மைந்தர்தாம்
மன்னு நீர்க் கடன்க ளாற்றி மனைய நத்தின் வாழுநாள். 29

மெத்து வஞ்ச முள்ளதம்பி வேறு வாழ நாடிமுன்
வைத்த செம்பொ னேர் பகிர்ந்து வாங்கி யங்கண் வைகியே
சித்த மெண்ணு வாறுசெய்து தீவினைத் திறத்தினுள்
நித்த மேவி யவல னாகி நிந்தை செய்ய யாவரும். 30

பொய்யரான தூர்த்தர் கூத்தர் போர்செய் மல்லர் புகழுவோர்
கையர் சூதர் ஆடல் பாடல் கற்றபேர்கள் காமுகர்
தையலார் கள் கொள்ளளவுள்ள தனமெலா மிறைத்தவன்
மையலாகி மெய்வருந்தி வறிய னாகி மறுகினான். 31

வனத்துறைந்து வழியின் மேவு வார் தனங்க ளாடைபூண்
கனத்த பாண்ட பாத்திரங்கள் கவர்ந்து கொண்டு மவர்தமை
சினத்தடித்து வாதையோடு சிதைவுசெய்து நகர்களின்
மனத்திலச்ச மொன்றுமின்றி வந்து சோரஞ் செய்துபின். 32

கள்ளை யுண்டு கொள்ளை கொண்டு களவு செய்யு நாளையில்
விள்ளு காவ லாளர் கண்டு வெட்டி யாவி போக்கினார்
உள்ள மஞ்சு கள்வருக் குடம்பு தள்ளு மென்றுமுன்
தெள்ளி யோர்கள் சொன்ன வாய்மை தெரியலான துலகின்மேல். 33

இறந்த பாவி யாவிதன்னை யியம தூதர் யாதனைக்
கறைந்த மெய்யி னுள்ளடைத் தருங்க யிற்றி றுக்கியே
சிறந்த கால னவையின் முன்பு சென்றுவிட்ட போதவன்
கூறங்கு கண்பி றங்கு மங்கி காலன் வன்சொல் கூறினான். 34

கூறி யென்று மேறிடாத கும்பிபாக நரகினுள்
ஊறு செய்தழுத்து மென்று ரைத்தபோது தூதரும்
ஈறிலாத நிரைய மீதி லிவனை யிட்டு வைத்தனர்
ஆறிடாத துயரமெய்தி யவனிரங்கு கின்றனன். 35

வேறு

இளையோ னியலி தினிமுன் னவனாம்
வளையா துயரு மகிமைச் சுசீலன்
விளைவா கியநல் வினையே புரிவான்
களைவா னிகலுங் கரிசான் றவையோ. 36

பரிகப் படிநாள் பலவா கியபின்
தகவுற் றரிதிற் றனையீன் றவர்கள்
றிகழ்மெய்க் கதியை நிலவப் புரியும்
புகழ்மிக் குயரோ தனமா புரியின். 37

சென்றங் கதிர்வெண் டிரைமுத் துமிழும்
மின்றங் கியகா விரிநீர் மூழ்கிப்
பொன்றங் கிதழிப் புரிபுன் சடையோன்
மன்றம் பொலிதாள் வனசம் பரவி. 38

பெருமைப் பதியிற் பிரியா தமர்வான்
றருமச் சிவபூ சனையுந் தவமும்
இருளற் றிடுமா றிரவும் பகலும்
ஒருமைச் செயலன் புடனே புரிவான். 39

தானச் செயலுந் தடையின் றுதவி
ஞானப் பெரியோர் நவின்மா மறையோர்
மோனத் துறைமா முனிவர்க் கடிசில்
வானத் தமுதாய் மகிழ்வுற் றுதவி. 40

உயர்மண் டபமும் ஒளிமா ளிகையும்
புயல்வந் துறைகோ புரமா மதிலும்
செயல்பொற் குடமார் சிகரத் திரளும்
வியல்மைப் புரள்வா விகள் சோலைகளும். 41

படிமக் கலனும் படர்சா மரையும்
கொடிபொற் குடையும் குளிர்முத் தணியும்
சுடிகைப் பணியுஞ் சுடர்பொற் கலனும்
சடிலப் புனலுத் தமனுக் கழகாய். 42

செய்வித் தகிலுந் திகழ்குங் குமமும்
மைவிட் டொளிர்மான் மதபா ளிதமும்
மெய்வத் திரமும் விரிபட் டினமும்
(ஐ)மைவத் திரனா ரணிதற் குதவி. 43

பெற்றா லிவணிற் பெறுபே றுலகின்
மற்றார் பெறுவார் வழுவா தெனவே
கற்றார் புகழக் கருதப் பதியில்
உற்றான் வருட மொருபத் தளவும். 44

குறையா தொழுகுங் குளிர்கா விரியின்
நிறைநீர் முழுகு நியமத் தொடர்பால்
இறையோ னருளோ டெளிதெய் தினனே
முறையா மணிமா முதற்சித் திகளே, 45

மனதின் புறவே வருமார்த் தியதாய்
உனுசித் தியினா லுரவோ னொருநாள்
அனலின் பதியும் புனலின் பதியும்
தனதன் பதியும் சடிலன் பதியும். 46

மகவா னுலகும் மறமார் நிருதித்
தகவோ னுலகும் தனியெய் தியபின்
அகழ்பா விகள்வெந் நிரயம் புகுதப்
புகல்சீ ரியமன் புரம்வந் தணைய. 47

இயமன் பரிவா லெதிர்கொண் டிமையத்
தையல்பங் கினனோ தனமா புரியின்
வியனன் குயர்கா விரிநீர் மூழ்கும்
நியமம் பெறுநின் னிலையார் புகல்வார். 48

ஏன்பா லணையுற் றமையென் னெனலும்
உன்பா லுலகத் துறுதீ வினையோர்
துன்பார் நிரையத் துயர்கண் டறிதற்
றன்பா லணைகுற் றனன்யா னெனவே. 49

தீயார் கொடுமைச் செயனீ யறிதற்
கேயா தெனவவ் வியமன் புகல
ஓயா நரகத் துயர்பா விகளைப்
பேயா னறியப் புரியு மனமே. 60

ஒன்றுந் தடைநீ யுரையா யெனுமத்
துன்றுந் தவனைத் துணையிற் கொடுபோய்க்
கன்றுந் துயரிற் கவல்வோ ரருகிற்
சென்றங் கவரைத் தெரிவித் தன்னே. 51

## வேறு

அன்னமரும் பசியினருக் கருத்தாம லயில்வார்தந்
துன்னு சிர மதினாவிற் சொரியுமழ லிருப்பாணி
பன்னுபல வறைந்தானைப் பகிர்ந்தரிந்து நுகர்வித்தும்
பின்னும்யம படர்வருத்தப் பெருவாய்விட் டரற்றுவதும். 52

தொடுதோல்பா துகையுடனே தூயவர் முன் னடந்தோரைக்
கடுவார்முட் கதையதனாற் காயமெலா முற்றுறுத்தி
விடுவானற் புனலொழுக்கி வேறிருப்பு முளையறைந்து
கொடுவாளால் அரிந்தரிந்தூன் குறைத்தொழுக்க வருந்துவதும். 53

பிறர்மனையா ணலநுகரும் பேதையழற் பாவையினை
யுறமருவி யூனுருகி போய்ந்தழிய நமன்றூதர்
வெ(வி)றகெனவே யெரித்தற்பின் வெய்யவழற் பாறையின்மேல்
நெறுநெறென வெலும்பொடிய வடித்தெரிவாய் நிறுத்துவதும். 54

குரவர்தமைப் பிழைத்தொழுகுங் கொடியோர்கள் விழிகடொறும்
விரவுகன லொழுகூசி யிகச்சொருகி யவர்நாவிற்
பரவிருப்பு முளையறைந்து படியமெலாங் குருதியொழக்
கரமுறுவாள் கொடுதுணித்துக் கடுநரகி லழுத்துவதும். 55

சிவனையவ னடியவரைத் திருவருள்சொல் லாகமத்தை
அவமுறவே பழித்திகலி யபகா(சா)ரம் புரிந்தோரை
பவவுடல மடித்தொடித்துப் பாரவழ லக்குடத்திற்
கவலுறவே யடைத்தெரிக்கக் கதறியவர் வருந்துவதும், 56

கொடுப்பதனைத் தடுத்தோருங் கொலைகளவு புரிந்தோரும்
அடுத்தவரைக் கெடுத்தோரும் அசத்தியரும் பிறர்பொருளை
எடுத்தவரும் புண்ணியத்தை யெண்ணிவிலை பகர்ந்தோரும்
நடுக்குறவிவ் வினைமுதலா நவைபுரிந்தோர் வருந்துவதும் 57

கண்டுமன மிரங்கிவரு காலையிலோர் தீநரகில்
மண்டுதுய ரொடுமொருவன் வாயொழியா தரற்றுமொலி
தொண்டுபுரி நற்சீலன் றூயசெவிப் புலனுறலும்
பண்டுதெரி யந்தகவிப் பாதகன்யா ரெனப்பகரும். 58

அருந்தவனே நினக்கிளையோ னாமிவன்செய் பாதகத்தாற்
பெருந்துயர நரகினிடைப் பொருத்துகின்றே னியானென்ன
பொருந்துமிவ னிடரகன்று புகலருநற் கதியடைய
திருந்தும்வழி யுரையெனுநற் சீலனுக்கந் தகன்மொழியும், 59

சீர்மேவோ தனபுரியிற் செழித்துவரு காவேரி
நீர்மூழ்த்த புண்ணியத்தின் நீர்முன்று நாட்பலனை
நார்மேவு முனம்விரும்பி நல்கினிவன் றுயர்நீங்கிப்
பார்மேவு புகழ்பொருந்தப் பரகதிசென் றடைகுவனால், 60

என்றும்வரு புனற்பொன்னி யிடையாடும் பலனவற்றுள்
ஒன்றிரண்டு நாட்பலனை யுதவுதலுந் துற்சீலன்
நன்றுகொடு நரகிலுறுந் துயர்முழுது முடனீங்கிக்
கன்றுமரா விழுங்கியுமிழ் கதிர்போலத் தோன்றினனால். 61

உத்தமர்க ளுடன்பிறந்தா ரொழியாத விடரொழிவார்
மெத்தியநற் பொருளெவையு மேவிநுகர்ந் தின்புறுவார்
நித்தனருட் பரகதிசேர் நிலைமையுமங் கணித்தாமால்
அத்தகையார் தமக்குலகில் அருள்பொருள்வே றுளதோதான், 62

ஆங்கமைய மதுதன்னில் அமரர்விமா னம்பொருந்த
ஓங்கிவன்பே ருவகையுள ரன்னியவ னதிலேறி
பாங்கிலரம் பையராடல் பாடலொடு சுரர்பரவ
பூங்கமழ்கற் பகநாட்டிற் பொருந்தினல னார்ந்தனனால். 63

தொல்லுலகோர் புகழ்சுவர்க்கந் துற்சில னெய்தியபின்
நல்லொழுக்க நெறிபயிலு நற்சிலன் யமனைவிடுத்(து)
அல்லொழித் தருள்பொன்னி யற்புதத்தை யெடுத்தேத்தி
ஒல்லெனநண் புடனேகி யோதனமா புரத்தணைந்தான். 64

அத்தலத்துப் பெருமை வியந்(து) அருட்பொன்னி நதிதோய்ந்து
புத்திரர்கா தலியுடனே புண்ணியம்பன் னாளியற்றி
நித்தனரு ளாலுடல நீக்கினான் அவன்றேவி
ஒத்தமனக் காதலினால் உடன்மரண மாயினளே. 65

ஆயபொழு திருள்சிய்க்கும் அருணகணா கிரணமணி
மேயவிமா னம்பொருந்த விமலர்திரு வருணாடி
ஏயபுகழ் மனைவியுட னேறினா னப்பொழுதே
தூயவிசும் பிடைநாத துந்துபியா லொலிமுழங்க. 66

நந்திகணத் தவர்கொடுபோய் நற்கயிலை வரையுய்ப்ப
அந்தமிலாக் கணத்தரச னாகியவ ணினிதிருந்தான்
இந்துநதிப் பரன்மகிழும் இத்தலத்தின் மகமாதம்
வந்துபொன்னி நதிபடிவார் மகிமையினி வகுத்துரைப்பாம். 67

ஆக திருவிருத்தம் 175

தீர்த்தச் சருக்கம் முற்றிற்று

## மாகஸ்நானச் சருக்கம்

(அறுசீராசிரிய விருத்தம்)

தண்டமி ணாட்டி லுள்ளான் சதுர்மறைக் கடற்கோ ரெல்லை
கண்டமா தவத்தின் மேன்மைக் கற்கர்கோத் திரத்தில் வந்தான்
பண்டைமுப் புரிநூன் மார்பன் பகர்ந்ததுற் பாக்கிய னென்போன்
கொண்டலை யனைய கூந்தற் குணசரா வதியை வேட்டு, 1

தந்தையர் தாயர் நல்ல சகோதர ரொடுவாழ் நாளிற்
சிந்தனைக் கிசைந்த வாறே தீச்செயல் புரிந்தா னன்னோர்
நொந்துள மிரங்கி யன்பா னோவுறச் சினத்த காலை
உந்துநன் னிதியிற் றன்கூ றுள்ளது பகிர்ந்து கொண்டான் 2

விழியினான் மருட்டித் தங்கள் மெய்ந்நலம் விலைமீக் கூறி
மொழியினா லுறவு காட்டி முயக்கியே பொருளும் வாங்கிப்
பழியொடு பாவம் நல்கும் பரத்தைய ரிணக்கத் துள்ளக்
கழிபெருங் காமத் தாலே கனகமு மறிவுந் தோற்று. 3

சாலியை யனைய பாரி தன்முகந் தனையு நோக்கான்
வாலிபர் துட்ட ராடல் வல்லவ ரினமாய்க் கூடிக்
கோலிய பாவங் கட்கோர் கொள்கல மாகிக் காம
நீலியர்க் குதவ வேண்டு நிதிகிடை யாமல் வாடி. 4

நீதிசேர் சோழ நாட்டோர் நிதிநிறை யந்த ணாளன்
கோதிலா தொருநாட் பாரி குலமக ளுடனே கங்குற்
பாதியிற் றுயில முன்சொல் பதகனோ ருபாயத் தாலே
தீதில்வண் கதவு தன்னைத் திறந்துகொண் டகத்துட் சென்று. 5

விழிகர மாக நாடி வியன்பொருள் கவரச் செல்லும்
வழிதெரி யாதுதுஞ்சு மைந்தனை மிதித்தான் காலில்
அழுதலின் முத்த மாலை யகப்பட வதுகைக் கொண்டவ்
வழிதகன் அகலு மெல்லை யெழுந்தனன் அந்த மைந்தன். 6

மைந்தனைத் தந்தை தாய்போல் வருடினன் வருடும் போதில்
தந்தைதாய் கரமன் றென்றத் தனயனங் கவன்கால் பற்ற
உந்திய விசையாற் றள்ளி யோடலும் வீய்ந்தான் மைந்தன்
வெந்தொழி லவன்காற் பட்டு விழித்தனர் துயின்றாரெல்லாம், 7

துஞ்சினார் விழித்து வாயி றொருந்நடை செய்து நெஞ்சம்
அஞ்சியே கள்ள னாமென் றவரவர் கூகூவென்றார்
எஞ்சலி னகரார் யாரும் ஏற்றிய தீபத் தோடு
வஞ்சமின் மறையோன் வீட்டில் வந்துபே ரரவ மாற்றி. 8

விப்பிரன் புதல்வன் மாய்ந்த விதமுமுத் தணிகைக் கொண்ட
துப்பில்சோ ரனையுங் கண்டு சூழ்ந்துவந் தனர்கள் யாரும்
தப்பிடா வகையா லன்னோன் றனைப்பிடித் திறுகக் கட்டிக்
குப்புற லுற்றுத் தண்டாற் கொதித்தன ரடித்தார் கூடி. 9

அடித்திடும் விதன மாற்றா தவனுயி ரிறந்தான் வேதம்
படித்தபுத் திரனைக் கொன்ற பாவத்தாற் பிரம கத்தி
பிடித்ததக் கள்வன் றன்னைப் பெருப்பசி தாக மேவி
வடித்திடு சூல வேற்கை வயிரவர் ஒறுப்ப வாடி. 10

அம்பரத் துழன்று பன்னா ளருந்துயர்க் கரைகாணாமல்
இம்பரின் மனிதர் யாரும் இயல்வழி மருங்கோர் போதிக்
கொம்பரில் வைகி யாங்குக் குறுகுவோர் தம்மை மாய்த்துச்
செம்புனல் குடித்தா னுண்டு தீங்குசெய் திருக்கு நாளில். 11

நாட்டினி லுயர்ந்த சோழ நாட்டினில் வேத வாய்மை
காட்டிய ஒழுக்கங் குன்றாக் காசிபர் குலத்தோர் பார்ப்பான்
சூட்டிய புகழின் மேன்மைச் சுதற்மனல் லமிர்தம் விண்ணோர்(க்)
கூட்டிய சிவனார் மேவு மோதன புரமேற் செல்வான். 12

செல்பவன் பரம னாமஞ் செப்பியங் கேகும் போதில்
நில்லென வரசின் மேய நிருதனுந் தீங்கு செய்தற்
கொல்லென வரலும் பார்ப்பான் உரைசெயுஞ் சிவநா மத்தின்
நல்லொலி செவியி லேற நடுங்கிமுன் வணங்கி நின்றான். 13

நின்றபா தகனை நோக்கி நீயெவன் நினக்குச் செய்கை
யொன்றிய வாறே தென்ன வுயர்ந்ததன் குலமு முன்செய்
நன்றலச் செய்கை யாவு நண்ணிய பவமுஞ் சொல்லி
இன்றுமைக் கண்டே னென்பால் இடரகன் றறிவும் பெற்றேன். 14

சிறியவர் பெருமை யோரைச் சேர்ந்திடிற் சிறுமை நீக்கி
அறிவுநல் லொழுக்கங் காட்டி யருங்கதி புகவுஞ் செய்வர்
நெறியிது சரத மன்றோ நீயெனை முழுதுங் காத்தல்
உறுதியா மென்ன நன்றென் றுரைத்து நீயஞ்ச லென்றான். 15

சூதன்மனு முடன்கொண் டேகித் துர்ப்பிரக் கியனை யன்னா
வதரண நகரிற் கோர்சார் வைகென நிறுத்தித் தான்போய்
விதவித மணியும் பொன்னும் வேழவெண் மருப்புஞ் சாந்தும்
முதலிய திரையால் வீசி முழங்குகா விரியைக் கண்டு. 16

தொழுதுபின் னயலா ரன்னம் தோகையர் போக மெண்ணெய்
பழுதென விலக்கி யோர்காற் பாரணம் புரிந்திவ் வூரில்
வழுவிலா வருட மொன்று வைகிநா டோறும் பொன்னி
முழுகுவே னென்ற காதன் முதிர்ச்சியாய் நியமம் பூண்டு. 17

இரவிவந் தெழுமுன் பொன்னி யீர்ம்புன லாடித் தற்பித்
தரனெழுத் தைந்து மீரை யாயிரஞ் செபித்து வேதம்
வரன்முறை யோதி ஞான வரதரோ தனபு ரேசன்
சரணிரு போதுஞ் சேவை சாற்றுமுப் போதுஞ் செய்து. 18

ஈசனுக் கநேக தீப மேற்றியந் தணர்கள் யார்க்கும்
வாசநெய் யடிசி லீந்து வருபவன் மாக மாதத்(து)
ஆசகன் முப்பா னாளும் ஆடிய பலன வற்றுள்
பாசமின் மூன்று நாளைப் பலனையப் பதகர்க் கீந்தான். 19

ஈதலும் பிரம கத்தி யேகிய தனைய காலை
போதமுங் குணமு மேவப் பொலிந்துதுர்ப் பாக்கி யன்றான்
சீதமுத் தணிகி ரீடந் திகழ்மணிப் பதக்க மாடை
காதணி யணிந்து தோன்றுங் கவினுறு தேவ னானான்.

அக்கண மமரர் மான மணைதர வதனி லேறி
பக்கம்வெண் கவரிவீசப் பனிமதிக் கவிகை தாங்கி
இக்கென வீணை நாத மிசைத்தபி னயத்தோ டாடி
மைக்குழல் மடவார் விண்ணோர் மருங்குறப் பொலிந்து நின்று. 21

லலமுறச் சுதர்மன் பாதம் வணங்கியீர்ம் பொன்னி யாடும்
பலமதின் மூன்று நாளைப் பலனெனக் களித்த லாலே
யலல்செயும் பிரம கத்தி யகன்றுவா னவனு மாகி
இலகுபாக் கியமும் பெற்றேன் இவணினின் னருளும் பெற்றேன். 22

இனியெனக் கறியும் பான்மை யியம்பெனக் சுதன்மன் கூறும்
அனிதமாங் களவு கோறல் ஆகிய பாவஞ் செய்தோர்
துனிசெய் பேய் நிருதர் நாரு சணுகர மாதி யாவாம்
மனிதராய்ப் பிறப்பர் மண்மேல் மன்னிய தர்மம் செய்தோர். 23

மானிடர் தமிற்சி றந்த வருணநான் காம வற்றுள்
மேனிலை வருண மூன்றும் வேதமோ துவதே நீதி
ஈனமில் சதுர்த்த ரானோர் இதியாச புராண மிக்க
ஞானவா கமங்க ளோதி நன்னெறி படர்த லாமால். 24

சூத்திரர் தமக்கு நான்கு தொல்குல மடந்தை மார்க்கும்
யேத்திய வேதந்தன்னை யியம்புதல் கேட்ட லாகா
நாத்திகழ் தமிழால் வேத நற்பொருள் உரைத்த லாகும்
நீத்திடு மாதர்க்கென்றும் பிரணவ முணர்த்த லாகா. 25

கடும்பசி தீர வால காலமுண் டனரே லாவி
விடும்பரி சன்றி யுய்யார் விதமிது போலப் பாசம்
எடும்படி மாதர் வேத மரும்பி ரணவத்தை யோதிற்
கொடும்பெரு நிரயஞ் சேர்வர் கூறுமோ ரயுத காலம். 26

காலமோ ரயுதஞ் சென்றாற் கடுநிர யத்தை நீங்கி
ஞாலமேற் றீயசென்ம நண்ணுவ ராத லாலே
சாலநல் லொழுக்கஞ் செய்வோர் தத்தமக் கியன்ற நூலை
ஏலவே மொழித னீதி யிதனைநன் கறிதி யின்னும். 27

குறளைபொய் யயலோர் குற்றங் கூறுதல் சிறிது மாகா
விறலுறு மலின யாக்கை யானென மதித்தல் வீணாம்
அறமியற் றிடுது மென்ன வடாதன செயலுந் தீதாம்
பிறர்குணங் கூற லாசை பெரும்பிணி யுறாமை நன்றே. 28

செய்யுமிப் பூசை தம்மிற் சிவபூசை சிறந்த தாகும்
செய்யுமிச் செபங்க டம்மிற் சிறந்ததைந் தெழுத்தே யாகும்
செய்யுமித் தானந் தம்மிற் சிறந்துள தன்ன தானம்
செய்யுமிம் மூன்றும் வல்லார் சிவனெனத் தொழவே வல்லார். 29

ஓதிய விவற்றை மெய்யென் றுணர்திநீ சுவர்க்க மேவி
தீதில்போ கங்கள் பன்னாட் சிறப்புடன் புசித்துப் பின்னர்
நீதியிவ் வறிவி னோடு நீள்கட லுடுத்த பார்மேல்
ஆதியாம் வருண மேய வதிகர்த்தன் புதல்வ னாகி. 30

நற்கன சேவ னென்னு நாமமும் பொருந்தி வேத
விற்பன னாகி வாழும் வேலையில் விசுவா மித்திரன்
அற்புத மாக மேவி யஞ்செழுத் துபதே சித்து
சிற்சில தரும மெல்லாந் தெரிவிக்க வினிது தேர்ந்து. 31

தலங்களிற் சிறந்த விந்தத் தலத்துவந் தநேக தன்மம்
நலப்பெறப் புரிந்து முத்தி நண்ணுவா யென்று கூறி
வலம்பெறு சுதர்மன் நின்றான் வானவர் வடிவு பெற்றோன்
துலங்குபொன் னுலகு மேவிச் சுகமெலாம் நுகர்ந்து பின்னர். 32

சூழ்கடற் புவியின் முன்னைத் தொல்லறி வுடனே தோன்றி
வாழ்சுன சேவ னாகி வருகவு சிகன்போ தித்த
ஊழ்முறை யொழுக்கம் போற்றி யோதன் புரத்தின் மேவி
ஏழ்பவத் துயரு மாற்ற வெண்ணில் புண்ணியமுஞ் செய்து. 33

மாகமா தத்திற் பொன்னி வரநதி யாடி யெங்கள்
ஏகநா யகனை வாழ்த்தி யிறைஞ்சியிங் கமர்ந்து பன்னாள்
மோகமாம் வலையை நீக்கி முடிவிலா முத்தி சேர்ந்தான்
பாகமார் முனிவீர் நீரும் படிந்திடில் முத்தி யாமால். 34

பாவிகள் சென்று யென்னி படிந்திடின் மாக மாதத்
தோவில்பா ஞவங்க டீரும் உற்றிய பாவ மில்லார்
ஆவிமெய் வருந்தா வண்ணம் அருங்கதி யடைய வேண்டி
தாவிலா தொருகான் மூழ்கிற் சாலவு மமையு மாதோ. 35

தானமும் தவமும் யோகத் தகுதியுஞ் செபமு மோம
மானவும் பிதிர்கன் மங்கள் ஆகிய வவையு மேலாம்
ஞானமு மேனைத் தீர்த்த நாணநற் பலனுஞ் சேர்வர்
ஊனமில் மாகமாதத் தொருதினம் பொன்னி மூழ்கில். 36

பழியொடு பாவ பேதம் பன்னுதுர்ப் பாக்கிய னானோன்
மொழிதரு மாக நான மூன்றுநாட் பலத்தி னாலே
ஒழிவிலாப் பிரம கத்தி யொழிந்துமே லுலகம் பெற்றால்
அழிவிலம் மாத முற்றும் ஆடுவார் பயன்யார் சொல்வார். 37

ஆக விருத்தம் 212

மாகஷ்நானச் சருக்கம் முற்றிற்று

## துலா ஸ்நானச் சருக்கம்

போதவங்கு சத்திலைந்து போர்க்களிற்றை வென்றுமுன்
காதரந்த விர்த்து முத்தி காதலித்த முனிவிர்காள்
ஓதனேசர் காவிரிக்கு ளுண்மையன்பி னைப்பசி
மாதமூழ்கு மான்மியத்தின் வன்மையொன்று கூறுகேன், 1

நீடுசெல்வ மேவுநாடு நீதிநாடு கோசலம்
தேடுமுட்பொ ருட்டொகைக் கோர் சேமவைப்ப யோத்தியிற்
கோடுவென்ற கொங்கைமாதர் கொண்டகற்பு வேதியர்
பீடுமன்னர் நீதிகண்டு பெய்யுமாத மும்மழை. 2

ஏத்துமன்ன கர்க்குவேந்தன் ஏற்றெதிர்ந்த மாற்றலர்
காத்திரத்த ரத்தமுண்டு கக்குசோதி வேலினான்
வேத்தவைக் குலக்கிரீட மேவிரத்தின நீடொளி
மாத்தளி(ர்)த்த பல்லவத்தின் மன்னுபொற் பதத்தினான். 3

ஆரருட்குப் பாரிபாரி லாவிகட்கோ ராவியான்
தீரவெற்பு தாரதாரு சேனைவெள்ள மிக்குளான்
சாரமுற்ற நூலெனச்சொல் சாகரத்தி னெல்லையான்
பேரெழிற்கு பேணிகர்த்த பெருமைபெற்ற தசரதன். 4

எவ்வனத்தி லட்டதிக்கு மெய்திவெற்றி கொள்ளவே
செவ்விமத்த கத்ததந்தி சிறுவாசி யேறுதேர்
கவ்வைமெத்து தானைவீரர் கந்தரத் திரைத்தெழீஇய்
பவ்வமொத்து மேலவந்து பச்சிமத் திறங்கியே. 5

அண்டலாரை மோதியாவி யந்தகற்கு நல்கியே
கொண்ட வூனி ரத்தமச்சை கூளிகங்க முண்ணவே
மண்டுபோரி யற்றிவெற்றி மாலைசூடி மீண்டுமின்
ஒண்டிறற்கொள் பூருவத்து முத்தரதி சைக்கணும் 6

சென்றுவெங் கொடுத்தபேர்க டேகமோடு செல்நாம்
இன்று வென்று போதுமென் றெதிர்ந்து போர்செய் மன்னரை
கொன்று வீர மங்கைசெங்கை கொண்டவிற் சிரத்துற
வன்றுதெக்க ணத்தினுந்த னாணையுய்க்கு மன்னவன். 7

சேனையோடு சென்றுதேவ தேவன்மெய்ச் சிராமலை
யானைபூசை செய்தகாவை யாறுவேதி கண்டியூர்
ஏனைநற்ற லத்தும்வைகி யெந்தசேவை செய்துகை
மானைமேவு மோதனேசர் வண்பதிக்க ணெய்தியே. 8

போற்றுதன்சொல் போனிறைந்து பொய்த்திடாத காவிரி
ஆற்றுநீர் படிந்துமுக்கண் ஆதிபாத வம்புயந்
போற்றுபத்தி யார்பணிந்து சொல்லினாற் றுதித்தபின்
நாற்படைக்கு லத்தொடேனை நற்றலத்தி னேகுவான். 9

தேறுதேரி வர்ந்துபாக செல்லவுந்து கென்னலும்
மாறில்பாக னுந்தவந்த வையவைய மீதினில்
தாறுபாய்த ரங்கமோடு தம்பமாகி நின்றதால்
ஆறில்யன்ன னென்னிதென்ன வுன்னுகின்ற வேலையில், 10

செல்லலற்ற தங்குலஞ் செழிக்கவந்த தேசிகன்
நல்லசிட்டர் சொல்வசிட்டன் ஞானலோச னத்தினால்
வல்லவாறு கண்டநின்ற மன்னனோடு செப்புவான்
சொல்லரக்கர் கோனுரத்த தோளன்விற்கை ராவணன். 11

ஆயவேத நால்வரங்க ளார்வமோடு பெற்றவன்
மாயவல்ல வன்பயந்த மைந்தனிந்திர சித்துமெய்
சாயலுள்ள புட்கரச மத்தனென்ற தம்பியும்
ஞேயமாக வுள்ளதீர னேரிலாத வன்கணன். 12

அவன்மிகுந்த மாயரூபி யாகிவந்துன் னிரதமும்
இவனியங்கி டாதுநின்றி டத்தடுத்து நின்றனன்
கவடுகொண்ட வவனைவெற்றி காணவெண்ணி லெண்ணிலா
புவனநாத ரோதனேசர் பொற்பதிக்கு ளன்பினால். 13

பொங்குசங்கி னங்குலவு பொன்னியாற்றி னலப்பசித்
திங்கண்முற்று மூழ்கிநாதர் சேவைசெய்யில் வெற்றியாம்
இங்குவந்த தந்தமாத மிதுவுநன்மை யித்தலத்
துங்கமான கவுதமாதி தாயர்பேறு பெற்றதால். 14

இசைத்தவாறு செய்துநின்முன் னெய்திலந்த ராவணன்
விசைக்கொண்டஞ்சி யோடுமென்று மேன்மைபஞ் செழுத்தையும்
நசைத்தசிந்தை மன்னனுக்கு நல்கினானம் மன்னனும்
அசைப்பிலைப்ப சிக்கணாளை யாறுமாறு மூழ்கியே. 15

ஈசர்சேவை செய்துதேரி லேறியூரும் வேளையில்
ஆசடாத தேர்நடத்த தவ்வரக்க னஞ்சியும்
மாசனாக னோடினானம் மன்னனைத்த டுத்தனன்
தேசமெச்சு கும்பகர்ணன் றிரனங்கு வந்தரோ. 16

தடுக்கவஞ்சி மன்னன்வந்து தையல்பாகர் சன்னதி
அடுத்து நின்ற னாதிநின்க ணன்புசெய்யும் யாவரும்
கடுத்தபேய ரக்கர்பூத கணவிலங்கு நஞ்சமென்
றெடுத்தவைக்கு மஞ்சிடார்கள் எனக்கிவ்வச்ச மெய்துமோ. 17

காக்கவேண்டு மென்றபோது கண்ணிலங்கு நெற்றியான் (நெத்தியான்)
ஆக்கமான கருணை நல்கி யையங்கரப் பிரான்முகம்
நோக்கியிந்த மன்னனெஞ்சி னோய்செய் தம்ப கன்னனை
தூக்குகா லிரண்டும்விண்டு சோரமோது கென்றனன். 18

சொற்றபோதில் ஆகுவூர்தி குழிராக்க தன்பதம்
அற்றுவிழ மோதலோடு மசைவிலாம னின்றனன்
உற்றவானு மேகநாத னோர்ந்துருத்து நண்ணலும்
அற்றவற்றி ரண்டுகாலும் ஆளமோதி விட்டனன். 19

காலொடிந்(து) அயர்ந்துதம்பி காதன்மைந்த ரிருவரும்
மாலொடுங்கி டந்ததன்மை மனத்தறிந்து ராவணன்
மேலோர்வேந்த னாலிவ்வண்ண மெய்தலங்க வன்றனை
ஒலொடுங்க வன்றுகட்டி யுறுவனென்று வந்தனன். 20

வந்தா நெடுங்கைக ணாலைந்து கொடுகட்டி மனுவா மயோத்தி யிறையைத்
தந்தா வளங்கொண்ட புலிபோ லெடுத்தேகுஞ் சமையத்தி லத்தி முகவன்
அந்தோ வரக்கன்பு யங்கால்க ளறுமா றடித்தா னடித்தபொழுதின்
கந்தார் புயங்கால்கள் வீழநொந்து படிமீது கருமேக மென்ன விழலும். 21

கூடுற்ற வன்சேனை விழுமிச்ச மரமுள்ள குலையிற் சிதைந்து திசைதோ
றோடுற்ற திச்செய்கை கண்டீச னருளான்மெய் யுயர்வாகை பெற்ற வரசன்
நீடுற்ற மணிமாலை முதலான பூவர்க்க நிறைபூமி தன்னிலுதிரச்
சேடுற்ற சிவனோத னேகன்ற னிருபாத திகழும் புயங்கள் புகழ்வான். 22

எண்ணுக் கடங்காத பதுமத்த ருவணத்த ரிமையோர்க ளாதி யெவரும்
மண்ணிற் சனித்தங்க மடிவாதி யறியாமை மருவிக் கறங்கி னுழல
பண்ணிப் புறங்கா டரங்காடி மாயாத பரிபூ ரணத்து முதலே
கண்ணுற்ற வடியார்கள் முன்வந்து துயரங்கள் களைவார்க ளுன்னியெவரே. 23

அளியேகண் மணியேநல் லருளேவின் னமுதேமெய் யழகே யெழுந்த னர்க்
கொளியே! புன் மறுவற்ற மதியேமும் மலமற்ற வுயிரே பரந்த பரைமேல்
வெளியே! சொல் பிரமாண மறியாத பிரமெய்வி யன்ஞான வின்ப மதுவின்
களியேயெனப் பன்னு துதியோதி நிலமீது கனிவாய் விழுந்து தொழுதான். 24

அக்காலை பரமேசன் வெளிவந்து புவிவீழு மரசன்றன் மேனி தடவி
மிக்கா யெடுத்தங்கன் அருள் செய்து வானுன்னை மிகநா மகிழ்ந்தன மிவனை
எக்காலும் வரு பொன்னி நதியிற் றுலாமாத மினிதாக யெவர் மூழ்கினுந்
தக்கார்க ளாவார்கள் பயமேது மடையார்கள் தகுமட்டசித்தி பெறுவார். 25

துலைமாதம் வருந்பதாறு மிப்பொன்னி நதி மூழ்கு சுகமாயன் உன்றன் மகனாம்
நிலைமேவு வாயந்த மகன்வீர ரொவெந்து நிசிபோ லிராவணனை முன்
அலையாத படை தம்பி மகனாகு மிவர் தம்மை யடுகின்ற வண்மை தருவோம்
அலையா வசிட்டன் சொல் மனுவைச் செபித்தெம்மை வழிபாடு செய்தி
யெனவே. 26

மறைவாயின் மொழியீசன் மறைவாக வவ்வண்ண மகிபன் புரிந்துவரலும்
துறையார் வசிட்டன்றன் அரசன்பொ ருட்டுற்ற துலைமாத முற்று மூழ்கி
முறையான சிவபூசை செய்தானம் மாதத்து முடிவின் கணந்த முனிவற்
கிறையோனும் வெளிவந் தனன்கோடி துதிகூறி யியல்பிற் பணிந்து
புகல்வான். 27

அரக்கர்க்கு மிகவஞ்சி னானெஞ்சி னில்மன்னன் அபயங் கொடுத்தி யெனலும்
பரத்துற்ற கயிலாய மலையைத் துளங்கச்செய் பதகன்ற னாவி கவர
வரச்சக்டர மாலந்த நிருபற்கு மகனாக வருவானம் மைந்த னவுணன்
இரக்குற்ற குலமோடு மடியிச்செய் வானஞ்ச லெனநாதன் வானில் மறைய. 28

நண்ணுந்து லாமாத மதிலோத னேசத்தி னளிர்பொன்னி மூழ்கு மகிமை
விண்ணும்ப ருங்கூற வரிதென்று கொண்டாடி மேலோன் வசிட்ட முனிவன்
பண்ணுந்து தேர்மன்ன னுடனேகி னானீடு பதியா மயோத்தி தனிலிவ்
வண்ணந் தெரிந்துற்ற மயல்போ யணைந்தார்கள் மாழ்குற்றிலங்கை
யவுணர். 29

கிளர்பானு குலமன்ன னிதின்மூழ்கிய யவுணோர்கள் கிளைகேடு மேவ
வலைசேர்
துளவாகை மாயன்றன் மகனாகு வரமேவு துணிபால் விளங்கு தருமம்
வளரோத னேசத்தின் மருவுந் துலாமாதம் வருபொன்னி மூழ்கு பெருமை
உளமீதுணர்ந் தின்ன படியென்ன வரிதென்று வந்தாரிருந்த முனிவர். 30

ஆக திருவிருத்தம் 242

துலா ஸ்நானச் சருக்கம் முற்றிற்று

உ

திருச்சிற்றம்பலம்

## சேடச் சருக்கம்

காதார் குழை யுடையான் மகிழ் கவியோதன புரியின்
மீதான துலா காவிரி மேன்மைச் செயல் கூறி
ஆதரமோ ராறும்பர னடியுந்தெரி சூதன்
பாதாளவி சாலாதிப சேடன் கதை பகர்வான். 1

மேனாளய னுயிரானவை மேவும்பொறை யுடல்கள்
ஆனாதுல கீரேழ்கடல் அமைத்தானவை தாங்க
வானார்குல வரையெண்டிசை விரைமேருவை வைத்து
நானாளுமவ் வுலகங்கட னடுவுற்றழுந் தியதால். 2

அலைவுற்றிடு புவிசஞ்சலமாகச் சுரர் முதலோர்
மலைவுற்றப னுலகுற்றவன் மலர்த்தாள் பணிந் தின்னல்
சொல்லுற்றபின் உமதா மிடர் தொலைப்போமெனச் சொல்லி
கலை கற்றிடு சேடன்றனைக் கமலாலய னோக்கி. 3

வலையாய் மிகு சூதார்வினை யில்லாப்பணி மன்னா
நிலை நீரிடை யசையாவகை படமாயிர நிரையாந்
தலைமீதுறத் தரிப்பாயெனச் சயிலாதிப மேருப்
பலமால்வரைப் பரியாப்புவி யொருவேன் பரிப்பதுவே. 4

எனலுஞ்சது முகனம்புவி யெடுக்கும்பல னுனக்கு
முனவன்றன தருடந்திடு மமனலும் பணி முதல்வன்
மனதன்புடன் விடைகொண்டு பின் வந்தே புவியெடுத்தான்
கனமங்கது பெரிதாய்த்தலை கவிழ்ந்தானுடல் வளைந்தான். 5

உதிரம்பல வாய்கக்கிட உயிராதுள ம்யங்கி
எதிரும்பல நாள்போனபின் னியலபிற் றெளி வுற்றே
மதியந்திகழ் சடையானருட் டன்னானிலம் வகிக்குஞ்
சதுர்வந்திடு மென்றானய னென்செய்குவன் றமியேன். 6

ஓயா திது செய்வாயென வொருவன்றனை வேண்டில்
வாயாவிது செய்வேனென வெந்தானிது செய்தற்
கேயாதெனின் மாயாவுடல் விடலேயினி தென்பர்
தூயோரது நானேசெய்வ னெனச்சேடனுந் துணிந்தான். 7

துணிகின்றவப் பொழுதே மனத் தூாந்தனைத் தவர்நீ
ருணியன்பொடு சோற்றுத்துறை நடுேர் மேற் றவம் புரிபின்
மணிகண்டன தருணாற்பல மலைவொருதி பலசூழ்
அணிதங்கிய புவிதாங்குறு வலிநா னுனக்கமையும். 8

பிற்றைத்தல மிசைகோடிநல் வருடந்தவம் செயினும்
முற்றைச்செயும் யோகத்திற் முதலானவை செயினும்
பற்றிப்புவி யின்மீது பரிக்குந் திறம் வருமோ
உற்றுத்தெளி வாய்நீயெனும் உயர்வான்மொழி கேளா. 9

சேடன்மன மகிழ்வாயுயர் சிவனாரருள் கருதி
நாடன்பொடு சோற்றுத்துறை நகரிற்கடி தணுகி
நீடுந்தவ நிலையெய்துற நேரத்தய னணுக
பாடும்பரி வொடுமுன்னியல் பரிசானவை யாவும். 10

சொல்லித்தவ முயனும்படி சொல்வாயென வேதன்
அல்லற்றிற மொழியப்பல மணையச்சிவன் வெளியாய்
ஒல்லைத்திரு வருடந்திட வொழியாவிட ரொழிய
வெல்லத்தகு மொருமந்திரம் விதியாலுரை செய்வான். 11

தருமந்திரராசன்பொருள் தருமம்பல நாமம்
பெருகின்பருள் வீடுந்தரு பெருமைத்திரு வுருவாம்
விரவும்பொருள் வடவித்துறு மிகுசாகைகள் போல
உருகுங்கலை வேதாகம முதவும்மொரு முதலாம். 12

நாலாரண வாரிக்கொரு கரையாமதை நவிலின்
மேலாமறி வெல்லாம்வரும் வேதச்சிர மெல்லாம்
கோலாகல மாகத்துதி செய்யுங்கடல் கொடுத்த
ஆலாலம தமுதாய்நுகர் சிவன்மேனியு மாமால். 13

அஞ்சத்தகும் பாவத்திரள் அகலச்செயு மதுதான்
அஞ்சக்கர மாகும்பிர ணவத்தோடெழுத் தானாம்
அஞ்சொற்றிரு மனுவாலர னாராதனை செய்யென்
றஞ்சத்தினை யூர்வோனுப தேசித்தவ ணகல. 14

அன்னானுரை முறையேபணி யரசன்சிவ மனுவைப்
பன்னாவரு நாடோறுமப் பதினாயிரஞ் செபித்துச்
சின்னாள்புனல் காற்றுண்டுறு சின்னாளுப வாசம்
முன்னாதர வொடுசெய் துளமுறுதாமரை மலரின் 15

பிறைகூவிள நதிநங்கிய பின்னற்சடை முடியுந்
நிறைபூதியி னுதலுஞ்சுடர் நிலவுந்திரு விழியும்
மறையாகம மலரும்பிர வாளக்கனி வாயும்
கறையார்தரு மிடறுமெழிற் கனியுந்தட மார்பும். 16

கொடுவன்புலி யதளுந்தொனி குமுறும்பர நாதத்
திடுகிண்கிணி மணியுந்தமை யெண்ணும்பரி பாகர்
படியும்படி சுகவாருதி தருபங்கய பதமும்
இடுதுங்கொடி யிடையாளையு முடையான்றனை எண்ணி 17

எழுத்தோவிய மெனவேபுரி தவநீர்மையு மியலின்
வழுவாவன விழுதாமென ஒருகார்வரும் வையம்
முழுதாரொளி மதிவேணியர் கண்டேசுரர் முனிவோர்
தொழுதேவர விடைமீது மைதன்னோ டெதிர் தோன்ற. 18

கண்டானுயர் சேடன்விழி களித்தான் மகிழ் குளித்தான்
கொண்டானுடல் புளகந்தலை குவித்தானிரு செங்கை
விண்டானிட ரெல்லா மொழி குழறிப்புவி வீழ்ந்தான்
தண்டாமரை மலராமிரு சரணத்துணை துதிப்பான். 19

வேதாகம மொழியாலுணர் விபுவானவ சரணம்
நாதாபர சுகவாருதி நபனானன சரணம்
ஓதாதுணர் கருணாகர வுமை வல்லவ சரணம்
பூதாதியி னிறையோதன புரிநாயக சரணம். 20

கங்கா நதி மதிசூடிய கனகாசல சரணம்
சங்கார்குழை யுடையாய்படர் சடைவேதிய சரணம்
சிங்காசன முயிராயுறை சிவசங்கர சரணம்
அங்காவிரி மணவாளமெய் யருள்மேவிய சரணம். 21

மானார்கர தலநாயக மகிழ்பூரண சரணம்
ஆனாவநு பவநிட்டையை யருள்பூரண சரணம்
நானாவித செககம்பித நயநாயக சரணம்
பூனாரணர் பணியோதன புரியற்புத சரணம். 22

என்றாயிர வாயாலிசை பெருகாபுகழ்ந் தேத்தி
நின்றேபர வசமாகிய சேடன்றனை நிமலன்
நன்றேசெயு நின்பூசனை நாமின்புறு கின்றோம்
ஒன்றாயினு மொழியாவகை தருவோம்வர முரையாய். 23

என்னப்பணி யீசன்சொலு மெளியேன்மன முனையே
உன்னத்தலை யுனையேதொழ வுன்சீர்சொல வென்வாய்
நின்னைக்கர மர்ச்சித்திட நின்சீர்செவி வினவ
மன்னிப்பத நின்னாலயம் வலம்வந்திட வேண்டும். 24

பொய்யானவை கோணிந்தை புறங்கூறல் பொறாமை
செய்யாமையும் இன்னும்பகர் தீதின்மையும் வேண்டும்
மையார்கட லேகோதக மாய்வான்மிசை வரினும்
அய்யாசிவ பத்தித்திற மசையாமனம் வேண்டும். 25

வரமொன்றினும் அகிலங்கடல் வாய்புக்கசை தலினால்
சுரரந்தணர் முதலோர்மிகு துயரப்படு கின்றார்
திரமொய்ம்புடன் அகிலச்சுமை பரிக்கும்பெரு திறனும்
தருகென்றனன் அளித்தனரு டானே யுருவானோன். 26

ஈந்தான்மிசை வருசங்கரன் ஏகப்பணி யெவைக்கும்
வேந்தாகியசேடன் புவி மிசையற்புத மெய்தி
யாந்தாரணி யொருகாலமும் அசையாவகை பொறுத்தான்
பூந்தாரணி சிவனோதன புரிச்சீர்சொலற் கெளிதோ. 27

ஆக 269

சேடச்சருக்கம் முற்றிற்று

## கவுதமச் சருக்கம்

பணமணி யிலங்கு மனந்தன்மெய்த் தவஞ்செய் பரிசையு மாங்கதற் கிரங்கி
மணமலி யிதழிச் சடையின ஈருளும்வரத்தையு முரைத்துளங் கரைத்தாய்
குணமக மேருக் கவுதமனன்னங் கொடுத்தமாக் கதையபு நெறிபோம்
உணவருள் புரிந்தெம் மிடர்ப்பசி தணிப்பாய் உத்தம தானமாமிதுவே. 1

ஆங்கவர் மொழியச் சூதனும்விளம்பும் அணிதிக ழோதன புரத்தின்
ஓங்கிய முனிவன் கவுதமன் சரித முவப்பவர் பவக்குறும்பெறிந்தார்
தேங்கமழ் சோலை சூழுமையாற்றிற் றிகம்பரன் மலரடி வணங்கி
நீங்கலி லன்பால் அன்னகர்ப் பாங்கர் நிலவுமாச்சிரமமொன் றமைத்து. 2

அதனிடை வதிந்து நாடொறு மையாற் றடிகளி னடிகளை வணங்கி
மதனுடை விடய வைம்பொறிக் களிற்றை மதியெனு மங்குசத்தடக்கி
யிதமுடனெவர்க்கு மன்னதா னஞ்செய் திருத்தலு நருமதை நதிப்பால்
விதமுறு நாட்டிற் றுவாதச வருடம் விண்முகின் மழைபொழிந்திலதால். 3

சென்னெலா முதலா நன்செயின் வளனும் சிறுபயறாதிபுன் செய்யின்
மன்னிய வளனு மினிய தண்டலையின் வளங்களும் விளைவிலவாக
இன்னல்செய் பசியா லுயிரெலாம் வருந்த வியன்மறை யோதி நன்குணர்ந்து
துன்னிய வொழுக்க முயரினு மோம்புந் தொன்மையோரிலக்க
வந்தணர்கள். 4

மனுநெறி வளர்க்குந் தாதகியலங்கல் வளவர்தம் பொன்னிநன் னாட்டில்
அனுதினம் வளங்கள் எவைகளும் பெருகியவரவ ரின்புறு கின்றார்
எனுமுரை வினவி யந்தணர் குடும்பம் யாவையு முடன்கொடு போந்து
கனைதிரை தரளங் கரைதொறுஞ் சொரியுங் காவிரி நாட்டினி லெய்தி. 5

அலமரு பொழுதி னஞ்சமிலன் றருளு மரன்மகிழ் திருவையாறணுகி
நலகவுதமமா முனிவனாச் சிரம நண்ணலு மம்முனி யெதிர்வந்
திலகுமின் முகமு முளத்துறு முவகை யாவையும் வெளிப்படு மின்சொல்
பலவுநன் கிசைத்தே யுடன்கொடு புகுந்தான் பரிவெலா முருவுகொண்
டனையான். 6

பந்தமோ டணைந்த வந்தணரெவர்க்கு பஞ்சநன் னதிப்பர னருளால்
அந்தவெண் மலைப்போற் குவிந்த தண்டுலமு மாடகமலை நிகர்பருப்பும்
முந்துபன்னிறத்த வரைநிகர் மற்றை யுபகரணங்களும் பெற்றே
ஐந்துறு திறத்தின் அறுசுவையுண்டி யளித்தன னவரவர்க் கவராய். 7

இம்முறை வினவி மற்றைய நாட்டி னியலுமூன் றிலக்க வந்தணர்கள்
அம்முனி யன்ன சாலையி னுறுக வவர்க்கு மம்முறைபணமளித்தான்
தம்மனை யிருந்து தம்பொரு ளுண்ட தகைமையோ னானிலக்கத்தோர்
செம்மறை யவர்கள் இராப்பகலடிசில் சிந்தையுற் றருந்தினர் இருந்தார். 8

இருந்தவர் சோம யாகமே முதலாம் யாகங்கள் மறை முறை புரியே
விரும்பினரிருந்த நிகழ்ச்சியை யுலகில் வேதியர் எண்ணிலார் கேட்டு
கரும்பொடு செந்நெற் கமுகுமுத் திறைக்குங் கழனிசூழ் திருவையாற தன்பால்
அருந்தவ நிறைக்குங் கவுதமாச் சிரம மணைந்தனர் முனியகமகிழ்ந்தார் 9

மகிழ்ந்தபின் னளவில் இலக்ஷமா மறையோர் மனப்படியினிய பாலடிசில்
புகழ்ந்தனர் அருந்தும் போனகஞ் சமைக்கப் பொழுதிலை யேவலோ போதா
அகந்தனி லன்பாய்க் கவுதம னெவர்க்கும் அனங்கொடுப்பானென வுலகின்
நிகழ்ந்ததோர் மொழிக்கும் மழுதுறுமாலென் னிலைமையோ சாலவுமினிதே. 10

கதிர்விரி பதும ராகமேமுதல கவின்மணித் தொகையல சோதி
முதிர்தம னியத்தின் சுவையல மகுட முதலிய வணிகலனல்ல
புதிய பட்டாடை விதமல வரிய பொருள்களோ பலவள வொருசாண்
உதரமே நிறைக்கு மோதனங்கேட் போர்க்குதவிடார் உடலமும் உடலோ. 11

யாவர்களேனுந் தன்னைவந் தடைந்தோ ரின்னலை முன்னமே யகற்றி
மேவினசெய்கை நிறைவுறப் புரிதன் மேன்மையதா மதையறிந்தும்
ஆவதுபுரியத் தகாவெனக் கிரங்கி யடைந்தவிக்கவலை தீர்த்தளிப்பான்
சேவுயர்பதாகை யோதனபுரியிற் சிவனெனத் தெளிந்தவ ணெய்தி. 12

ஆலய மதனை மும்முறை வலஞ்செய் தண்ணல் சந்நிதிமுன மிறைஞ்சிச்
சாலவும் புவியில் ஐந்து மெட்டுறுப்புஞ் சார்வுறப் பணிந்தெதிர் நின்று
கோலவன் பருவி விழிதர நீற்றிற் றுலவுவண்டலை யுடல்விரவ
ஏலவே செங்கை யுச்சியிற் குவித்தே யியல்மறைப் பொருள்கொடு துதிப்பார். 13

கோதிலா வடியார் குறைதவிர்த் தருளக் குரைகழல் புனைந்த பொற்பதனே!
நாதவேதாந்த சித்தின் மீதிலங்கு ஞானவம் பநட நவில்வாய்
கீதவா ரமுதே! வாணவப் படலஞ் சிதைத் துயிர்க் கண்ணொளி விளக்கும்
போதபூரணனே! போதன புரத்தெம் புனிதனே! புண்ணிய முதலே, 14

அருவமும் உருவும் மருவுரு விரண்டு மன்றியே சராசர மெல்லாம்
உருவதாய் மருவும் பரமனே! யெய்ப்பி லுதவுநட் சேபனே சுரர்க்காய்
பொருசிலை பிடித்துத் திரிபுரம் பொடித்த புராதனா! யிராவணன் புரிந்த
பெரும்பிழை பொறுத்தாய் போதன புரத்தெம் பிஞ்ஞகா! வுள்ளுறைப் பொருளே!

நம்பினர்க் கிரங்குங் கற்பகத் தருவே! நலமலி கருணையங் கடலே!
இம்பரு மும்பர் முழுவதுந் தொழும்பர்க் கியைந்தமெய்க் கடவுண் மாமணியே!
செம்பொனே! தேனே! மாலயன் றேறுஞ் செல்வமே! யிமயமின் றெடுத்த
கொம்பனார் குலவு போதனபுரத்தாய்! தழகனே மழுவிடை யவனே. 16

இப்படிப் பரனைத் துதித்தபி னன்பா யிலகிய கருணையுத் தமியை
மைப்படி நயனக் கல்யாணியே! யுமையே! மாயையெல் லாம்வல் லவளே!
செப்புலகு எவையுந் தாங்குசிற் பரையே! சிவனுள மகிழ்ச்சி செய்பவளே!
ஒப்பிலா தவளே யெண்ணிலா வுயிரை யொருங்குபெற் றளித்தநற் றாயே. 17

தாரகை போலு முத்தமா லிகையாய்! தமனியக் கலசவெம் முலையாய்!
வீரவாள் விழியாய் அணுவினுஞ் சிறிய மெல்லிடை யாய்பிடி நடையாய்
ஆரவெண் ணகையாய்! கொவ்வைவா யமுதே! யருணிறை சலதியே யீரேழ்
பாரவர் பரவு போதன புரியிற் பாமனார் விரும்புபார்ப் பதியே. 18

பன்னுயிர் எவைக்கும் ஊட்டுதற் கன்ன பாத்திர மிடக்கையிற் பரித்து
மன்னிய கிரண விரத்தினத் தெறுவி வலக்கையி னனுதினங் கொண்ட
அன்னபூ ரணியே! போதன புரியி னன்னமே கன்னலங் குதலை
இன்னைய மொழியாய் அன்பருக் கெளியாய்! இலகிய ஞானசுந் தரியே. 19

அஞ்சலென் றருள்வா யெனத்துதித் துங்கட் கடைக்கல மடைக்கலம் என்பால்
எஞ்சலில் வேத முணர்ந்த வந்தணர்கள் எண்ணிலார் வந்தன ரவருக்
கைஞ்சுவை யடிசில் அமைத்திடின் முடியா தாதலா லன்னரா சியையுஞ்
செஞ்சுவைக் கறியே முதலுப கரணத் திரள்களுங் கொடுத்தெனைப் புரப்பீர். 20

சொற்றவிவ் வரநீர் தராலிடி னூறு துணிபட வெனதுவன் சிரத்னை
அற்றிட மோதி யுயிரினை விடுவேன் அந்தணர் நிமித்தமா னிமித்தம்
உற்றிடுசுரவனடியார் நிமித்தம் ஒப்பிலா வுங்களி னிமித்தம்
முற்றிய வுயிரைத் துறந்திடி னவர்க்கு முத்திநிச் சயமென மொழிந்து. 21

மிக்கவைந் தெழுந்தா லோதன புரியின் விமலனை யுலகமா தாவை
தக்கவா றன்பு பெருகிடத் தயில தாரைபோற் றியான முற் றிருந்தான்
அக்கண மடியார்க் கெளிய சங்கரனும் அருளுரு வானவம் பிகையும்
பக்கமோ ரிரண்டில் விநாயக னயில்வேற் பண்ணவ ரிருவருமருவ. 22

சூலம்வாள் கணிச்சி சக்கர மழுதவல் தோமரம் வச்சிரம் பிண்டி
பாலமுற் கரமே யாதியா யிலங்கு படைக்கலந் தரித்தசா ரதர்கள்
ஏலவெண் டிசையுஞ் சூழ்வர முனிவோர் இசைமறை யெடுத்தெடுத் தேத்த
சாலவிண் ணவர்கள் பூமழை பொழியச் சகமெலாம் ஒளிமயமாக. 23

நாரணன் பிரமன் இந்திரன் முதலோர் நயமொழி யியம்பினர் பரவப்
பூரண புனித நித்தியா னந்த புராதன பராபர மூல
காரண பரம வென்றருணந்தி கைப்பிரம் பசைத்தியா வரையுப்
சீரணி பொருந்த விலக்கிமுன் வரவே திசையெலா மிசைமய மாக. 24

வெள்ளிமால் வரைமேல் பவளமால் வரையும் வியன்மர கதமணி வரையும்
உள்ளமார்ந் துறைதல் போற்சிவ னுமைபாள் உடன்விடை யூர்ந்தெழுந் தருள
பள்ளமீது யர்ந்த புனன்மிகப் பாய்ந்த பான்மைபோற் சென்றுமுன் வணங்கி
எள்ளலிற் புவியிற் கிடந்தநற் றவனை யிருவரு மெடுத்துமெய் வருடி. 25

எல்லையில் நீதித் தவகவு தமனே யியம்புக வரமெலா மெனலும்
முல்லைமென் முகைபோ லன்னமா மலையும் முதிரொளித் தமனிய வரைபோற்
சொல்லுமெண் பருப்பு நவமணி வரைபோற் சுவைக்கறி விதமுமுக் கனியும்
நல்லவா மபூப விரைகளுந் தயிர்பால் நறுநெய்யாங் கடல்களும் பிறவும். 26

சுசிருசி னதத்தோ டளித்தவை தினமுந் தொலைவிலா தென்னைவந் தடைந்தார்
பசிதவிர்த் தருள்வாய் யென்னலும் பரமன் பார்பதி யினைமுகம் பார்த்து
கசிவுடை முனிவன் உரைத்தன வெல்லாங் காவிரி வடிவமாய் வந்து
நொசிநுசுப் பணங்கே கொடுத்தரு ளென்று நுவன்றனன் கவுரியு மிரங்கி 27

அன்புரு வான கவுதம முனிவ னஞ்சலை பகர்ந்தன வெல்லாம்
இன்பமார் பொன்னி நதிவடி வாகி யீதுவே னென்றருள் புரிந்து
துன்பிலிந் நகர்ப்பாற் பத்திமே யாசனையுந் துயர்பசி யணைவுறா தென்றான்
முன்பெலாம் பொருந்து மிடர்களைந் துவகை முற்றினான் கவுதம முனிவன். 28

ஆயகா லையினி லிருவரு மறைந்தார் அருந்தவ னத்திசை நோக்கி
நேயமா யிறைஞ்சி யருண்முறை பார்க்க நிலவுகா விரிக்கரை யெய்தி
தூய சித்திர நல் லடிகிலின் வரையுந் தொட்டகை யன்றியும் சொல்லும்
வாமயலா மணக்குங் குய்ப்புகை கறியின் வருக்கமும் பருப்புமாம் பொருப்பும். 29

அண்பனீ ருறும் அபூபமா மலையும் அருஞ்சுவை முக்கனி வரையும்
தணிபுனல் மதுரந் தருமிள நீருஞ் சருக்கரை விதப்பருப் பதமும்
பண்புறு தயிர்பால் நறுநெயாங் கடலும் பாகுமெல் லிலைமுக வாசம்
விண்பயில் பொருப்பும் பிறவுமே நிறைத்து விமலைகா வேரியா யிருந்தாள். 30

காவிரி வடிவாய் நினைத்தன வெல்லாங் கணக்கிலா வகைநிறைத் துமையாள்
மேவின கருணை கவுதமன் கண்டு வியப்புட னகமகிழ்ந் தன்பால்
மீவலி னணைந்த வந்தண ரெவர்க்கு மன்னதா னந்தின மளித்தான்
ஓவில்விப் பிரரு நுகர்ந்தினி திருந்தார் உயர்முனி கவுதமாச் சிரமம். 31

மெய்த்தவ நிறைந்த கவுதமன் பெரிய வேள்வியை விதிமுறை துடங்கி
பொய்த்தலில் காத லொடுநிறை வேற்றிப் புனல்படிந் திருந்தனர் தமக்கும்
உய்த்தநன் னிதிய முதலவாந் தானம் உதவின னருமறை நதிப்பால்
மொய்த்த வந்தணர்தங் கிளைக்குப நயன முதவிய மங்கலச் செயலும். 32

சதுர்மறை யாகம் பிதிரெதிர் கன்மஞ் சாந்திரா யண முதற் றவங்கள்
விதம்விதம் புரிய வேண்டிய வாறே விப்பிரர் மகிழ்வுறப் புரிந்தான்
அதிர்திரை சுருட்டு நருமதை நாட்டி னந்தர முகின்மழை பொழிந்து
முதிரிடர் தவிர்ந்து வளமெலாம் விளைந்த முறைமைவந் தவர்சொலக் கேட்டார்.

தம்பதிக் கேகும் படிகவு தமர்க்குச் சாற்றின ரந்தண ரவனும்
நம்பிய பரிவால் விலக்கினன் பின்னும் நண்ணினர் வருடமொன் றதன்பின்
இம்பரிற் புகழை யெமைப்புரந் ததனால் எய்திய முனிவனுள் ளளவும்
நம்பதிக் கேக விசைகில னென்ன நாட்டினர் பாயமொன் றவமாய். 34

வஞ்சனை தனிலோர் பசுவினை வகுத்து வயலிடை மேய்ந்திடப் புரிந்தார்
கஞ்சனை யனைய கவுதமன் விளைவு காணவே இன்னதை நோக்கி
நெஞ்சுறு பரிவால் செச்சவென் றொருகோ லீட்டினன் பசுவினை விலக்க
அஞ்சையும் வென்ற முனிவனாச் சிரம மணைந்தபின் வஞ்சனைப் பசுவும். 35

வீழ்ந்துயிர் இறந்த பசுவெனக் கிடப்ப விரவிய வந்தண ரெல்லாம்
சூழ்ந்துசோ கத்தி கவுதமன் புரிந்தான் தூயனோ விவனெனப் புவியில்
வாழ்ந்தவ ரெவர்க்கு முனிவர ரெவர்க்கும் வாயினில் வந்தவா றுரைத்தார்
ஆழ்ந்தபே ரறிஞ ரெங்கொலென் றயிர்க்க வந்தணர் தங்கணா டடைந்தார். 36

இருபிறப் பாளர் பசுவைவஞ் சனையால் இயற்றிய முறைமையு மவர்கள்
ஒருவரு மொழியா துரைத்தசொற் படியு முணர்ந்தருட் கவுதம முனிவன்
வருடமோர் பதின்மூன் றளவும்வெம் பசியால் வருந்திடா தளித்தரு ளெம்மை
பெருநிலத் திகழ்ந்த விபர்மறை யிகழ்ந்து பிதற்றுபா சண்டர் களாகி 37

திருவெண்ணீ றதனைத் தெய்வவைந் தெழுத்தைத் திருவுடை யாளமா மணியை
நிருமலா கமத்தை யருட்பர சிவனை நேசமாய்த் திகழ்சிவார்ச் சனையை
கருதுமா லயத்தைத் தொண்டரைப் பாமன் கதையினை நாடொறு மிகழ்ந்தே
மருவிய பாவ மதோகதி வழிக்கு வலம்பொதி சோறதா யீட்டி. 38

மண்ணினை யூர்த்த புண்டர மாக மாசுட லெங்கணுந் தரித்து
மெண்ணிய சங்கு சக்கிராங் கதத்தை யீட்டுநற் றமிழ்தெலுங் கிவற்றின்
நண்ணுவிற் பனராய்த் தங்குல மடவார் நாடுசூத் திரர்தமை விரும்ப
கண்ணிய நாலாங் குலத்துமா தரைத்தாம் காதல்செய் மனத்தருமாகி. 39

ஆரண விதியா லன்றிமா யவனை யருச்சனை செய்துசூத் திரரைச்
சேரவந்தனை செய்தியாகமே முதலாச் செயும் பல நியமும் விடுத்து
தாரணி யதனின் அவைத்தரா கென்னச் சபித்தனன் சபித்திடு முறையே.
பேரருள் பொருந்தி யந்தண ருழன்றார் பெருமுனி பெருமையார் புகழ்வார். 40

நாவரு மொழியான் முனிவனை யிகழ்ந்த நருமதை நாட்டிலந் தணர்கள்
பாவகா ரிகளாய் விடலரு நிரயப் படுகுழிக் கருகரா தலினால்
யாவரே யெனினு மாரணடி யவரை யினியநல் லடிசிலீந் தவரை
மேவர விகழ்ந்தோர் கொடியதீ வினையெவ் விதத்திலு மகற்றுவ தரிதே. 41

இவ்வண்ண நிகழ்ந்த பின்னரும் பரனை யினிதுணர் கவுதம முனிவன்
செவ்வனே யன்ன தானம்பா வர்க்குஞ் சிறப்புட னளித்தவணுறலால்
அவ்வணி நகர மோதன புரமா மண்ணலும் ஓதனே சுரராம்
வெவ்வினை தவிர்மா தவன்செயும் பூசை மேவலாற் கவுதமே சுரனாம். 42

அறுசுவை யினிய வுபகர ணத்தோ டன்னமா மலைகுறை வறவே
உறுமுறை பெறவே காவிரி யுருவா யுமையவ ளளித்தகா ரணத்தால்
மறுவில்சீர் கவுரி அன்னபூ ரணியாய் மருவுகா வேரிவல் லவராய்
நிறைதரு மொருபேர் படைத்தன ரடியார் நினைத்தன நினைத்தவா றருள்வார்.

ஆகத் திருவிருத்தம் 312
கவுதமச் சருக்கம் முற்றிற்று

## சூரியச் சருக்கம்

முயலு மைம்புலன் வழியினை முனிந்துயர் குறும்பின்
மயலெ றிந்துணர் கவுதமன் சரிதைவா னமுதம்
இயலு றும்படி யருளினை யெழுகதிர்க் கடவுள்
உயவ ருஞ்செய லுரையென முனிவர ருரைத்தார். 1

பரந்த காரிருள் அகன்றிடப் பேரருள் பரப்பி
அரந்தை தீர்த்திடு மாறிரண் டாதபர் தம்முட்
பொருந்து மெய்க்கவி படைத்தபூ டரவெனும் புகழோன்
திருந்து சிந்தையன் கவுதமன் செயலெலாம் தெரிந்து. 2

யாமு மெண்ணிய வரமெலாம் பெறுவதற் கிதுவே
தோமு றாநெறி யாமெனத் தனதுளந் துணிந்து
நாமு னாகிய துதிகொடு கற்பக நாட்டோர்
தாமும் வாழ்த்திய வோதன புரியிலைச் சார்ந்து. 3

பொன்னி நன்னதி படிந்துவெண் ணீறுடல் பூசி
மன்னு நன்மணி யணிந்தெழுத் தைந்தையும் வழுத்திச்
சொன்ன பாதக மனைத்தையும் அகற்றிநற் சுசிகள்
துன்னு விக்கிமெய் மந்திர மிவையெனச் சூழ்ந்து. 4

பூத்த சீருருத் திரமொடு சமகமும் புருட
சூத்த முந்திகழ் தருபஞ்ச சாந்தியுஞ் சுருதி
ஏத்து காலங்கள் மூன்றினும் புனல்படிந் தியல்பின்
நாத்த மும்புறச் செபித்தனன் நியமமாய் நாளும். 5

முந்துமா தத்துப் பகலுண விரண்டென மொழிய
வந்தமா தத்தி ராவுணல் மூன்றெனு மதியின்
நந்து தாரணை பாரணை நான்கெனு மதியிற்
றந்த கந்தமே யுணலைந்து மாதத்திற் சாகம். 6

சலில மாறெனு மாதத்தி னேழுமா தத்தின்
மலியும் வாயுமெட் டாமதி தனிலுப வாசம்
பலித வொன்பதின் வாய்த்தன பணையொரு பத்தின்
நலிய வொன்றையும் பார்த்திட லின்றியே நலியும். 7

திங்க ளோர்பதி னொன்றினிற் செப்பல்கே ளாமை
துங்க மாறி ரண்டினிற் றொடாமையொன் றினையும்
இங்கு மேவுபன் மூன்றினின் மணமுயிர்த் திடாமை
தங்குசித் திரைப் பருவமேயா தியாய்த் தவங்கள் 8

மருவு மற்றொரு சித்திரைப் பூரணை வரையும்
அரிதி னாற்றிமெய்க் கவுதமர் சொற்படி யரனார்க்
கிருமை வெள்விடை மணிக்கொடி யேற்றியே யியலால்
விரவு நாளிரு நான்கினும் வாகன விழாவும். 9

செப்பு காஞ்சன விரதமே லொன்பதாந் தினத்தில்
அப்பு வேணியான் வருந்திரு விழாப்புரந் தன்னாட்
டப்பி லின்சுவை யபூபங்கள் விசித்திரோ தனங்கள்
ஒப்பி லாதபேரன்பி னைவேத்திய முதவி, 10

தீர்த்த நல்விழா வொருபதாந் தினத்தினிற் செய்தே
கார்த்தி கேயனைப் பெருந்திரு நுதல்விழிக் கருணை
மூர்த்தி யாலயத் தினிதெழுந் தருளவே முயன்று
ஆர்த்தி தீரவே யன்பினாற் றுதிசெய்வான் அருக்கன். 11

வேத வாருதி முகட்டெழும் வியன்சுவை யமுதே
போத சிவனு முள்ளவா றறிந்திடாப் பொருளே!
மாத போதன ருளத்திடைப் பதிக்குமா மணியே!
பாத தாமரை செப்புற நடநவில் பரனே.

திருவடிப் பிழை புரிந்தவர்க் கருள் செயாச் சிவனே!
பொரு மலர்க்கணை வேளுடல் பொடித்த புண்ணியனே!
வெருவ முப்புரந் தழலெழ நகைசெய்த விகிர்தா!
அருள்கொழித் தகன் அன்னபூ ரணியிடத் தவனே. 13

வாங்கு தெண்கடல் விடமமு தாக்கிய மருந்தே
ஓங்கு பாசவல் லிருளெலாந் துரந்தபே ரொளியே
தாங்கு பல்லுயி ரனைத்தையும் போற்றுபைந் தருவே
தேங்கு பொன்னிசூழ் ஓதன புரத்துறை சிவனே. 14

இருக்க ணாதியாய்த் துதிசெயும் பரமனே யென்று
வருக்க மாகிய புளகங்க ளுடலெலா மருவ
உருக்க முற்றிரு கரங்குவித் தஞ்சலி யோங்க
அருக்க னன்பொடு துதிசெயப் பேரருள் அமலன்

கங்கை தங்கிய சடைமுடிப் பிறைக்கதிர் காட்டத்
தங்கு நீணுதற் றிருவிழி யிருளெலாஞ் சாடப்
பொங்கு பேரொளி யானனம் இன்னருள் பொழியத்
துங்க நீற்றினுத் தூளம்வெண் ணிலவெனச் சூழ. 16

மறைக ளிர்ந்தசெவ் வாயின்வெண் ணகைமகிழ் வழங்கப்
பொறைசெ றிந்ததேன் இதழிமா லிகைபுயம் பொலிய
நறைப ரந்தசெம் மார்புமுந் நூலணி நயப்பக்
குறைத விர்ந்தகை யபயமும் வரதமும் குலவ. 17

கண்ட பேர்மல கடின மும் வெண்ணெய்போற் கரைய
தொண்டர் மாலயன் சுரர்செய செயலெனத் துதிப்ப
வெண்டி சாமுக மெங்கனு மேத்தொலி யிசைப்ப
மண்டு சீரொளி யிலிங்கநின் றிறையவன் வந்தான். 18

வந்து தோன்றிய வோதன புரியரன் மலர்த்தாள்
சிந்தை யன்பொடு செங்கதிர் பணிந்துடல் சிலிர்ப்ப
முந்து கண்கணீர் சொரியவெக் காலமு மூதிரா
சுந்த ராவெனைப் புரந்தரு ளெனப்பல துதித்தான். 19

ஆய காலையி லிறைதிரு வுளமகிழ்ந் தருக்கா!
தூய வானநின் செபங்களுந் தபங்களும் துதியும்
நேய மாகநா மகிழ்ந்தனம் பெறும்வர நின்பால்
ஏயு மாறினி யுரையெனச் சூரிய னிசைப்பான். 20

கிரகம் யாவர்க்குந் தலைமையு மெனதொளி கெழுமிப்
பரவிடும் பொருள் புரிதுமா முறைமையும் பாரில்
விரவு மாருயிர்க் கண்ணொளி யென்னொளி மேவிக்
கரவி லாதெலாங் காண்டலுந் தந்தருள் கனிவால். 21

துணிவின் யானுனைப் பணிதலாற் பாற்கரே சுரப்பேர்
அணிக நீயுனைச் சித்திரைப் பருவநா ளதனிற்
பணியும் யாவர்க்கு மிகபர மிரண்டையும் பணிப்பாய்
தணிவி லாவருட் பரமனென் றனனிறை சாற்றும். 22

புகன்ற யாவையுந் தந்தன நீநமைப் பூசை
மகிழ்ந்து செய்தமை யாவரு மறிய நாமருவித்
திகழ்ந்த வச்சிவ லிங்கமேற் சித்திரை மதியின்
மிகுந்த சித்திரை நாளந்தி தொறுமொளி விரிப்பாய். 23

விளங்கு மப்பொழு தெமைதெரி சித்தவர் விழைவால்
உளங்கொ ளவ்வரு டம்புரி பாவம்வின் டொழியும்
களங்க மின்றியே சித்தசுத் தியும்வருங் கதியும்
துளங்க வெண்ணிரை யத்துயர் பொருந்திடா துணிபே. 24

உனக்கு வேதனை யாண்டுக டொறுமிலை யுருகும்
மனத்தி லன்புட னத்தின முனைப்பணி வார்பால்
அனைத்து நோயிலை மிடியிலைப் பாயச மருத்தின்
நினைத்து நீபுரி விழவினைக் கண்டவர் நிமலா. 25

ஆய்ந்து கொள்கென வின்னமெய் வரமெலா மருளி
ஏய்ந்த பேரொளி யின்னெழுந் தம்முகி லிடைபோய்த்
தோய்ந்த வாறிலிங் கத்திடை மறைந்தனன் சோதி
வாய்ந்த சூரியன் றன்னுல கடைந்தனன் வணங்கி. 26

ஆக விருத்தம் 838
சூரியச் சருக்கம் முற்றிற்று

## சுசன்மச் சருக்கம்

புண்ணியமெய்ச் சிவபாதப் புணையை மேவிப்
பொங்கு துயர்ப் பிறவியெனும் புணரி நீந்தி
நண்ணுதிரு வருட்கரையி லேறி முத்தி
நாடணுகிச் சிவயோக நாளு மேவும்
பண்ணவர்காள் பருதிசிவ பூசை செய்த
பலனிதுமே லோதனமா பதியின் மேவித்
திண்ணியசத் தியினாலோர் மறையோ னன்பாற்
றிருப்பணிசெய் துய்ந்த கதை செப்புகின்றாம். 1

மங்களமென் றொருநகரிற் சுசன்மா வென்னும்
மறையவனல் லொழுக்கமுளான் மைந்தர் பாரில்
அங்கவர்கள் யாருமிலான் வறுமையாலே
யாதுலனாய்த் தீர்த்தயாத் திரைமேற் கொண்டு
கங்கைவளர் காசிபிர யாகை காஞ்சி
கனகலமா கேதாரம் சோம னாதம்
சங்கமஞ்சாய்க் காடுசுவே தாரண்ணிய மாரூர்
சத்திமுற்றம் வாஞ்சியம்வே தாரண்ணியம் புகலூர். 2

இடைமருது மாயூர மாடுதுறை துருத்தி
யேடகமை யாறுசிராப் பள்ளிதிருப் பழனம்
கடனாகை காளத்தி கழுக்குன்ற மதிகை
காறாயில் குடவாயில் கடம்பவனந் தருமை
குடமூக்கு முதலான தலங்களிற்சென் றிலங்கு
குளிர்தீர்த்த பலனுதவுந் திருச்சோற்றுத் துறையின்
இடமாக வந்துபொன்னி நதியாடி யிறைவன்
இணைமலர்ச்சே வடியிறைஞ்சி யேத்தியகிழ்ந் தன்பின். 3

புறத்தணுகி யந்தணர்கள் மனைகடோறும்
புகுந்தேற்று மாதுகரம் புசித்துச் செக்கர்
நிறத்தானை நெஞ்சினினைத் தொருவன் வீட்டில்
நித்திரைசெய் தனன்கனவி னிமலன் மூப்பாய்ச்
சிறப்புடையந் தணன்போல வந்திபா மிவ்வூர்ச்
சிவனெம்பேர் தொலையாத செல்வ ராகும்
பெறச்சிறந்த கருணையொடு நீங்காமல் விளங்கிப்
பேணியிருக் கின்றனமிப் பெருஞ்சோற்றத் துறையில். 4

எமதுசின கரமிகவும் பழுதான ததனை
யெழில்பொருந்தப் புதிதாக வியற்றுதி யாங் கதற்கு
தமரமுறு காவிரித்தென் கரையிலொரு கிணற்றிற்
றமனியமென் ணிலவத்த மஙியத்தை யெடுத்தே
அமர்தரச்செய் பணிவிடைக்காக் கெனவிறைவன் மறைந்தான்
அந்தணனும் விழித்துமிக்க வதிசயித்துக் காலை
கமலமலர் குலவுபொன்னி நதிபடிந்து நித்திய
கன்மமுடித் ததன்பின்பு கண்ணுதல்சொற் படிபோய். 5

மாற்றுயர்ந்த பசும்பொன்னெண் ணிலாதனவக் கிணற்றின்
மன்னுதல்கண் டகமகிழ்ந்து மரபினவை யெடுத்தே
ஏற்றமுட னோரிடத்திற் றொகுத்திறைவர் கோட்டம்
இயற்றிடுகிற் பரைவருவித் தியல்பினொடு தொடங்கும்
காற்றலைமை யரசனொடு சுசன்மனிதி வைப்புக்
கண்டெடுத்தா னென்றுசில கசடர்சொல வேந்தன்
ஆற்றலுறு சிலரைவிடுத் தந்தணனைக் கொடுபோய்
அருஞ்சிறையில் வைத்துநிதி யத்தனையுங் கவர்ந்தான். 6

இச்செயல்கண் டந்தணன்போ லிறையரசன் கனவில்
எழுந்தருளி யுறுபொருளு ளனதெனினு மிதுகேள்
வைச்சபொரு ளினைநமது கோயில்புதி தாக
வளருமெழி லுடன்வகுக்க மறையவன்பா லளித்தோம்
அச்செயலை யறியாம னிதியனைத்துங் கவர்ந்தாய்
அவனையுமோ சிறையில்வைத்தாய் ஆவதுசெய் திலையான்
நிச்சயமே தியன்சிறையும் விடுத்துநிதி யனைத்து
நீயுதவி யினிததனை நிகழ்த்திடா யெனிலே. 7

அடலுறுநின் சதுரங்க மனைவிழுத லாகும்
அவமையுநின் னையுநாச மாக்குவமென் றுரைத்து
நடனவிறை மறைந்தனனப் பொழுதரசன் றுயில்போய்
நடுநடுங்கிப் பயந்தந்த நள்ளிரவப் பொழுதில்
விடலரிய சிறையைவிடுத் தந்தணனைப் பணிந்து
மேன்மை யறிந்திலன் புரிந்த மிகைபொறுப்பீர் என்று
படவரவன் அருள்கனவு முரைத்துநிதி யனைத்தும்
பாலித்தா னினியென்னாற் பயமணுகா தெனவே. 8

ஆதரவிற் பரமசிவன் அருளைநினைந் துருகி
யந்தணன்பார்த் திபன்கொடுத்த வருநிதியங் கொடுபோய்த்
தீதகலுஞ் சிற்பவிதி தேர்ந்தவர்சொற் படியே
திகழுமதி லேழுமுயர் சித்திரமா ளிகையும்
மேதகுகோ புரவிதமு மண்டபத்தின் விதமும்
வியன்யாக சாலைமுதல் விளம்பியசா லைகளும்
பேதமிலாக் கற்றளமும் வாயிலுந்தெற் றிகளும்
பிறங்கியபொற் சோபன விதங்களுமே குயிற்றி. 9

பாலமரும் பிரதமமே கர்பைபத்ம யாளம்
பகர்கண்டங் கழுத்துகு முதமொடுபட் டிகையே
காலுயரம் வீரகண்டந் தாடிகுடம் பலகை
கவினுறையுத் திரத்தினொடு மெழுதகம்போ திகையே
தூலமுறு மேழிருக்கை கபோதம்வே திகையே
தூக்கோடு சந்திரநிலை மார்நாசிக் கூடு
கோலமுறு சித்திரநா சிக்கூடு மாலை
கொள்ளுமுனைப் பாதிகெற்ப கிரகமதிற் குயிற்றி. 10

ஐங்கரற்குத் தென்றிசையில் அறுமுகற்கு வடக்கில்
அரிதனக்கு மேற்றிசையில் அருள்சபா பதிக்கு
துங்கவீ சானதிக்கிற் சோமாக்கந் தருக்குத்
துலங்குபெலி நாயகர்க்குச் சொலுநிருதி திசையிற்
செங்கனக வாலயஞ்செய் தங்கவரை யங்கண்
சிற்பனா கமஞ்சொல்பிர திட்டையுஞ்செய் வித்து
பொங்குமனற் றிசையாதி யீசதிசை யளவும்
பொருந்துமொரு மண்டபத்தைப் பொலிவினுட னியற்றி. 11

சிவாநுமதி யொடுகுகனைப் பிரதிட்டை புரிந்து
திருவீதி நான்கிலும் சிவத்துவிசர்வை திகர்கள்
ஆவாவுறுமெய் யாடலொடு பாடலியற் றிடுவோர்
ஆதியாம் பரிசனரை யறிந்துகுடி யேற்றி
உவாவதனைப் புணைந்தசிவன் பூசையெவை களுக்கும்
உபகரண மெனவுரைத்த வெகுவிதபாத் திரமும்
தவாமனிறை திரவியமும் ஆடையணி கலனும்
தாசர்தா சிகள்பூமி தனதான்னி யம்மே. 12

வேண்டுமற்றைப் பொருள்களை நித்தியமா யமைத்து
விமலனுக்கு மிமையமலை மெல்லியற்கும் விதியால்
ஈண்டுகும்ப வபிடேக மியற்றுவித்துத் தானம்
எண்ணில்வகை கொடுத்தபின் இபன்மறையின் பொருளாற்
பூண்டவன்பி னோதனபு ரேசரையு மன்ன
பூரணிதன் னையும்பலவாய்ப் புகழ்ந்துநும தருளாற்
காண்டகுமா லயமமைத்தே னுவந்தருள்வீ ரென்னக்
கண்ணுதலோ னெதிர்தோன்றிக் கருணையொடு புகலும். 13

இகத்திலுனக் கெண்ணியபூ மியுந்தனதா னியமும்
எழின்மணியு முதலான பாக்கியமு மீந்தோஞ்
சுகத்தினுடன் விவாகமுநாம் விரைவினியல் விப்போம்
தோன்றுபுத்திர பவுத்திரருஞ் சுற்றமுமிக் கியாசு
மகத்துவமா மெமதுபக்கத் திடமுனக்கா மென்று
வரமளித்துத் தனதனைமுன் வரவழைத்துச் செல்வம்
மிகப்பெரிது முதவுகெனச் சுசன்மாவுக் களகை
வேந்தனளித் தன்னிதியம் வேண்டுவன வெவையும். 14

கருதமனோ நின்புதல்வி சுசீலையை யிங்கிவர்க்குக்
கலியாணஞ் செய்கவெனக் கலைமதியம் புனைந்த
மவுலியனே நின்னருளாற் செய்வனெனப் பணிந்தான்
வள்ளல்பரா சரனோடு மறையின்வழி யிவற்குச்
செவியமணஞ் செய்கவென மறைந்தனன்பின் முனிவன்
சிலமுறு விரதசமா வர்த்தனமுஞ் செய்து
புவிபுகலு மதுபர்க்கங் கோதான முதலாய்ப்
புரிந்துசுசீ லையைச்சுசன்மாப் பொருந்தமணம் புரிந்தான். 15

மணம்புணர்ந்த சுசன்மாவு மனைவிநல நுகர்ந்து
வங்கிசவுத் தாரகரா மைந்தரையும் பயந்தே
இணங்குமக்கி னிட்டோம மேபவுண்டரீகஞ்
சத்திரமா தானமுட னசுவமெந்தன மெவையும்
அணங்கினரு மமரர்களு மகிழும்வகை யாற்றி
யப்பதியில் வாசமா யநேகநாள் மருவிக்
குணங்கிளரு மனைவியுட னாயாச மரணம்
குறுகியது பெருகியது குறைவில்சிவ போகம். 16

பெற்றவர்கள் பாவீடு பெற்றபின்பு புதல்வர்
பெருமை தருமப்பதியிற் பிரியாம லுறைந்து
நற்றவருங் கற்றவரு நாளுமன மகிழ
நண்ணியபுண் ணியந்தாதை போலநயந் தியற்றிச்
சிற்றிடைப்பொன் மானெடுங்கட் கருங்குழற்செங் கனிவாய்ச்
செழுங்களபப் புளகமுலை சிற்பரையோ ரிடத்தின்
உற்றபுரன் ஓதனமா புரேசனிரு சரணம்
உன்னிமைந்தர் சுற்றமுடன் உவந்துமகிழ்ந் திருந்தான். 17

ஆகத் திருவிருத்தம் 355

சுசன்மச் சருக்கம் முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

## கேதார விரதச் சருக்கம்

வரம் விரும்பிய சுசன்மனற் சரிதையை மகிழ்ந்து
பரவ சத்தராய்ச் சடைமுடி துளக்கு பண்ணவருக்
கரன ளிக்கையா லுமையவ ளாற்றுகே தார
விரத நற்செயல் மேன்மையைச் சூதனும் விளம்பும். 1

ஆதி நாளினின் மந்தர கிரிக்குகை யமரும்
பூதி மேனியின் புண்டர நுதலினன் சாந்தன்
ஓது சுத்தன்மெய்ச் சிவபத்தி யுடையவ னோங்கும்
வேதன் மைந்தனாம் வியன்சனற் குமாரமெய்த் தவன்முன். 2

பிருங்கி மாமுனி வந்தடி பணிந்தன னன்பின்
விரிந்த புண்ணிய விதமெலா மறிந்தவித் தகனே
அரந்தை சேர்புவி யாழ்வெனும் புனலிடை வாடி
வருந்து வோர்க்கவை தீர்த்திடு திவ்விய மருந்தே. 3

யாது நீயறி யாதிலை யெண்ணிலா வருடம்
மாத வங்கள்யான் புரிந்துமெய் வருந்தியும் பரமன்
ஏத மில்லருள் புரிந்திலன் இனியருள் புரியும்
நீதி யீதெனும் உபாயமொன் றருளென நிகழ்த்த. 4

சனற்கு மாரனப் பிருங்கிசொல் வினவியே தயவாய்
உனக்கு நின்மல னருள்புரி யுபாயமொன் றுளதால்
மனத்தி லன்பொடு கேளதி ரகசிய மாறாச்
சினத்த தீவினைப் பனிக்குயர் பருதிபோற் றிகழும். 5

அலகில் சித்திகள் யாவையு மளிப்பது பூசா
பலனெ லாந்தரு வதுசிவனி மகிழ்வது பகரில்
இலங்கு பத்தியி னியற்றுநற் பிதக்கண மிதனை
விலகி னார்செயும் பூசையும் வீணெனும் வேதம்.

எங்கள் சங்கர னன்றியே தேவர்கட் கிரெண்
மங்க லில்லுப சாரபூ சனைதரு மகிழ்ச்சி
செங்கை மான்மறித் தேவர்க்குப் பிதக்கண மகிழ்ச்சி
துங்க வேசெயு மெனப்பல வாகமஞ் சாற்றும். 7

இனைய தாகிய சிவன்மகிழ் பிதக்கண மிதனை
நினையு மன்பொடு புரியென நிகழ்த்தலும் பிருங்கி
முனிவ னன்னது முடிவுற நினையென முனிவன்
அனைப தாகென வுரைத்தனன் பிருங்கிபு மன்பால். 8

வணங்கி யன்னவன் விடைகொடு போந்தக மகிழ்ந்தே
அணங்கி னல்லவ ளாகிய யுமையினை யன்றிப்
பணங்கொள் வாளராப் பணியணி பரனையே பரிவால்
இணங்கு மைந்திரண் டாண்டெலாம் பிதக்கண மியற்ற. 9

நம்ப னச்செயல் மகிழ்ந்தன னல்வரங் கொடுத்தற்
கும்பர் மாமுனி பிருங்கிமுன் இனிதெழுந் தருளக்
கொம்ப னாளுமை கூறுவாள் குணகுணி யென்னா(து)
உம்பர் நாயக பிரித்தனன் என்னையும் உனையும். 10

நின்னை மாத்திரம் பிதக்கணஞ் செயுமிவன் நிலைமை
நன்மை யோவரம் கொடுத்தரு ளேலென நவிற்ற
மின்ன னாயுனை மனத்திடை வணங்கினன் மிகவும்
அன்ன வன்றனை முனியலை யெனநயந் தருள. 11

ஆயி னென்றனக் கொருவர மளித்தபி னவர்க்கு
நேய மார்வரம் அருளெனக் கருள்வர நிகழ்த்திற்
றூயநின் றிரு மேனியிற் பாதியென் சொரூபம்
ஏயு மாறருள் செய்வதென் றுமையவ ளியம்ப. 12

செப்பு மிவ்வர மருந்தவம் புரிந்தலாற் சேரா
திப்பு விக்கணென் றிறைகொல வத்தவ மிதுவென்
றொப்பி லாதவள் உரையென வுன்னியே யெல்லாம்
தப்பி லாதளிப் பதுநமக் குவகைசெய் தகைத்தாய். 13

விரைவி னிற்பய னல்குகே தாரமா விரதம்
உரைசெய் யாகம விதிப்படி யாங்கதை யுருற்றில்
விரைவி னித்தியா னந்தமா நமதுமெய் வடிவிற்
பரையு னக்கொரு பாதிநல் குதுமெனப் பகர்ந்தான். 14

பகர்ந்த வாசக முமையவள் கேட்டருட் பகவ!
நிகழ்ந்த வவ்விர தஞ்செயு முறைமையுஞ் செய்தற்
குகந்த வுத்தம தலமு நன் கியம்பென வுமையே!
புகழ்ந்து மூன்றுநாட் செய்யவு மொருவழிப் புகலும். 15

மதிசெய் கன்னிமா தந்தனின் மதிவளர் நவமி
யதுதொ டங்கியம் மதிதுறை சதுர்த்தசி யாவும்
துதிசெய் மூவெழு தினத்தினுஞ் சுடரெழு வதன்முன்
புதுவி ரைப்புனல் நானமும் நியதியும் புரிந்து. 16

கவிய மைந்தமு தைந்தொடு கனிகரும் பிரதம்
செவிய நல்லிள நீர்கள் சுந்தோதகஞ் சேரும்
திவிய மானசுத் தோதசுந் திருவெழுத் தைந்தான்
அவியன் னாய்திரு வுருத்திரஞ் சமகநன் மனுவால். 17

மூந்து மன்பினா லுமையபி டேகித்து முடிவிற்
பைந்து கிற்கதி ரொளிதிகழ் ரத்தினா பரணம்
சந்த னங்கருப் பூரமான் மதமகில் சாத்திக்
கந்த மாமலர் மாலைக ளாலலங் கரித்து. 18

பருப்பின் போனகம் பாயசம் மிளகுநெய் பதங்கள்
கருப்பிற் கட்டியின் போனக மறுசுவை கறிகள்
விருப்பு வாய்த்திடு மபூபங்கள் நறுங்கனி விதங்கள்
சருக்க ரைப்புனல் பானிய மருத்துக தயப்பால். 19

திருந்து பாகிலை சேர்ந்ததக் கோலமோ டேலம்
பொருந்து சாதிநற் காயில வங்கக்கர்ப் பூரம்
அருந்து மைந்தெனச் சொலுமுக வாசமு மளித்து
வருந்து றாவகை தூபமுந் தீபமும் வழங்கி. 20

மின்னு மாசிப்பச் சைக்கையாந் தகரையே விளவு
மன்னு வில்லுவ மிலந்தைநன் னொச்சியே வன்னி
துன்னெ ருக்கொடு நந்தியா வர்த்தமே தும்பை
யன்ன மல்லிகை யறுகுமா விட்டுணு கிரந்தி. 21

அலரி மாதளை நெல்லிபித் திகைமண மடுத்து
நலிவில் பாரிசா தங்கணா யுருவியே நாவல்
இலகு பத்திர நாமமா யிரமருச் சித்துப்
புலரு மற்றைநாட் பாரணம் விதிப்படி புரிவாய். 22

கூறு மிவ்விர தந்தனைக் குவலயத் தோங்கி
ஏறு சீர்புக ழோதன புரத்துநீ யெய்தித்
தேறு சிந்தையாற் செய்தனை யெனின்மனஞ் செப்பும்
பேறு கிட்டுமென் றுரைத்தனன் வரைத்தனுப் பெருமான். 23

கங்கை சூடிதாள் பணிந்தருள் விடைகொடு கனிவாய்
துங்க வானவர் பரிசனஞ் சேடியர் சூழத்
தங்கு முத்தம வோதன புரியிடைச் சார்ந்தே
எங்க ளம்மைகே தாரநல் விரதத்தை யியற்றி. 24

துதித்த காலையிற் பாற்கடன் மீதுசெஞ் சோதி
பதித்த வாதபர் கோடியோ ரிளங்கதிர் பரப்பி
யுதித்த தென்னவெள் விடையின்மேல் உமையவள் முன்னம்
மதித்த வண்ணமே தோன்றினான் பேரருள் வண்ணன். 25

தோன்று தன்கண வனைமல ரடியிணை தொழுதே
ஆன்ற வேதமு மளவிடா ஞானவா ரமுதே
யூன்று மன்பிலேன் புரிந்தவிவ் விரதநீ யுளத்தில்
ஏன்று வந்ததே பேறினி யரியதென் னெனக்கே. 26

என்று கூறலு மிறைதிரு வுளமகிழ்ந் தெமது
நன்று மேனியிற் பாதிதந் தோமென நங்கை
துன்று மாமணிச் சோதியை மரகதச் சோதி
யொன்றி யோர்புறத் திருந்தெனச் சிவனிடத் துறைந்தாள். 27

கால மன்னதிற் செஞ்சடைக் கருங்குழல் கலக்க
பால நீற்றோடு சிந்துரத் திலகமும் பயில
ஏல ராவணி யொடுமுத்த மாலிகை யிலங்க
கோல வன்புலி யுரியொடு பட்டுடை குலவ. 28

விந்து நாதமொன் றாயுயிர்க் கிருஞ்சுக விளக்கம்
நந்தனார் விழிச் செம்பஞ்சின் குழம்பொடு நணுகத்
தந்தை தாயிரு வோரையு மோருருத் தன்னில்
இந்த யாநிலத் தெவர்களுங் கண்டினைப் பாற. 29

ஆதி நாயக னத்தனா ரீசுர னானான்
போது வானவர் போதுமா மழையினைப் பொழிந்தார்
ஓது பத்தர்க ளொலிபரந் தோவலா (ஓங்கலால்) லுலகம்
நாத மாமய மென்பது நாட்டுமெந் நாளும். 30

இமைய மீன்றரு டோகையு மோகையுற் றிருப்பக்
கமைநி ரம்பிய பிருங்கிமா முனிக்கரன் கனிந்து
தமைவ ணங்குநின் மனந்திருக் கோயிலா நமக்கே
அமைபெ ருங்கணத் தலைவனீ யாகவென் றருளி. 31

உத்த மத்தல மானவிவ் வோதன புரியில்
சத்தி யோடெமை வலஞ்செய்வா யென்முனி தாழ்ந்து
பத்தி யாலிரு வோரையும் வலஞ்செய்து பரன்பால்
வைத்த பார்ப்பதி கருணையும் பெற்றக மகிழ்ந்தான். 32

கன்ன லின்மொழி யமுதினைக் கண்ணுற் கருத்தி
இன்னல் செய்விட வேகந்தீர்த் தருளுமை யிசைப்பான்
என்னை விட்டுனை வலஞ்செய்வோர் மதுநுகர்ந் திரங்க
மன்ன வண்டுரு வெடுக்குமா றருளென வளித்தான. 33

ஆகத் திருவிருத்தம் 388

கேதார விரதச் சருக்கம் முற்றிற்று

## (சோமவாரச் சருக்கம்)

அம்புய நான் மலர்வதனத் தம்பிகைகே தாரநோன் பாற்றி நீண்ட
செம்பவளச் சடைப்பரமன் இடப்பாகஞ் சேர்ந்திருந்த திரமி தாமால்
இம்பருல குயிரெவையு முமதுயிரா மெனக்கருதி யிரங்கி நாளும்
நம்புதவம் புரிமுனிவீர் இனிச்சோம வாரபலன் நபந்து சொல்வாம். 1

நன்மைதரு மறிவுதவங் கல்வியுஞ்செல் வபுங்கொடுக்கு நாளும் பெற்ற
தன்மையுறு பிறப்பகற்றும் தரணியொடு வானாளத் தருஞ்சர் செய்யும்
துன்மரணந் தவிர்க்குமடற் பகைதொலைக்கு பரமுத்திச் சுகமு நல்கும்
வின்மதிசூ டியபரமன் மகிழ்சோம வாரமியல் விரதந் தானே. 2

பொன்னவிருஞ் சுணங்கலர்ந்த புளகமுலை யயிராணி புடையின் மேவ
மின்னனைய நுண்ணிழமருங்கின் மேனகையு முருவசியும் விரும்பி யாடக்
கின்னரர்கள் யாழ்முரலக் கிளிமழலை மதிவதனக் கொண்டை நாட்ட
வன்ன முலை யரம்பையர்கள் மணிக்கவரி முறையிரட்ட வசந்தமேவ. 3

விண்ணவர்கள் மணிமகுட விதழ்மிஞ்சிப் பதஞ்சிவப்ப விரைகு லாவும்
தண்ணெனன்மது மழைபொழியுஞ் சந்தான மலர்சொரியச் சலசம் பூத்த
வண்ண முகி விருந்தநென மடங்கலணை மிதிருந்து வானோர் கோமான்
நண்ணறு முனிவர ராசி நவிலவிய னுலகரசு நடத்து நாளில். 4

விருத்திரனென் றொருநிருதன் மேவலர்தம் முயிர் குடிக்கும் வீரவேலோன்
கருத்திலுறு வெகுளியினாற் கனற்பொறிகள் சிதறிய செங்கண்ணா னென்னா
தருகனுயர் வடவரையைத் தண்டமெனப் தடித்தெடுக்குந் தறுகணாளன்
உருத்திகழும் வடவனலும் உளநடுங்கிச் சிகையொடுங்கவுரப்புஞ் சொல்லான். 5

தானவர்தம் குலம்விளங்கச் சனித்தமரர் முதல்வனொடு சமருஞ் செய்ய
வானவுல கய்துதலும் வாசவனும வெள்ளைமத மலையி லேறி
யானபடைக் கடல்சூழ வார்ப்பரவந் திசைபோர்ப்ப வணைந்தா னென்னார்
ஊனகுவேல் விருத்திரனும் உறுபடைபோ டறைகூவி யுருத்து வந்தான். 6

இருபடையும் படைவழங்கி யெதிர்ந்தபொழு ததிர்ந்ததுல கெழுந்த சோரி
நிருதர்தலை புயாங்கரமன் னிலைதடிந்தார் அமராட னிருதர் வானோர்
குருமவுலி சிரங்கரந்தோள் குறைத்தனரப் பொழுதமரர் கோமான் செங்கை
பொருசிலைநா ணெறிந்தசுரர் போர்தொலைந்து பயந்தோடப்புறமுங் கண்டான்

கண்டபொழு தசுரர்சிறை கைச்சிலையை வளைத்துநெடுங் கணை தொடுவி
அண்டர்சிறை யெதிர்வரலும் அவனுமமற் சிலையைவளைத் தநேகவொளி
மண்டுமவ னிரதமிசை மார்பின்மிசை தோளின்மிசை வழங்கி யார்த்தான்
கொண்டசினத் தவுணனுமக் கொடுங்கணையை யடுங்கணைகள் குறித்து
விட்டான். 8

இம்முறையே யிருவர்களும் இகல்புரிய வவுணன்வலிக் குடைந்த வானோர்
செம்மல்பல முறைசமருஞ் செய்தும்வெற்றி யுற்றிலனச் செய்கை யாலே
வெம்முனைவன் றகன்றனவே பின்வாங்கி புன்னடந்து மேவி வெல்வான்
அம்மவினிச் செயுஞ்சூழ்ச்சி யாதெனும்போ தருட்குரவ னணைந்து சொல்வான். 9

சிந்தைசெயும் வரமுதவு மோதனமா புரத்தின்விரிச் சிகமா தத்தில்
வந்துபொருந் திடுசோம வாரவிர தம்புரியும் மரபாற் செய்யின்
அந்தமிலா விருத்திரனைக் கொன்றுமலர்த் தொடைவாகை யணிவா யென்ன
எந்தையிது செய்குவனென் றிந்திரனும் அந்நகரத் தினிது போந்து. 10

ஆதரவின் மதிவாரத் தலர்கமழுங் காவேரி யாற்றின் மூழ்கி
ஏதமிலா வைந்தெழுத்தைநச் செபித்தாரா தனையியற்றி யிரவு தன்னிற்
சீதமதி யணிந்தசிவன் சேவைசெய்து பின்பசனஞ் செய்திவ் வாரம்
மாதமுழு தினும்விரதம் புரிந்துபரன் மலரடியை வழுத்துங் காலை. 11

செஞ்சடையிற் பிறையிலங்கத் திருமுகத்தி னருள்விளங்கத் தேவர் போற்றும்
மஞ்சனமா மிடறிலங்க விடையினெம்மா னெழுந்தருள வமரர் கோமான்
கஞ்சமல ரடிவணங்கி யஞ்சலிசெய் தாயிரங்கண் களித்து நிற்பப்
பஞ்சனமெல் லடிப்பாகன் வேண்டும்வரம் பகர்தியெனப் பணிந்து சொல்வான் 12

வீரமிகு விருத்திரனை வெல்லும்வரம் அருள்கவென விளங்கு சோம
வாரவிர தப்பலனால் அவனைவெல்லும் வலியுனக்கு வழங்கி னோமென்(று)
ஈரமதி யணிந்தபரன் பகர்ந்தருள விந்திரன்வா னெய்தி யந்நாட்
கோரவிருத் திரனுயிரைக் குலிசமுனைக் கொடுத்துவெற்றி கொண்டா னன்றே. 13

அளகைநகர்க் கிறைவனிந்த விரதமோ தனபுரத்தி லணைந்து பத்தாண்(டு)
உளமகிழ மன்பினுட னுஞற்றுதலா லோதிமத்தை யுயர்த்து ளானும்
துளவணியு மாதவனும் தொடர்வரிய சங்கரற்குத் தோழ னாகி
வளனுதவு சங்கநிதி பத்மநிதிக் கதிபதியாய் மன்னி னானால் 14

சிவபக்தி சிரோமணியாய்ச் சகலகுரு வாய்த்தியான சீல னாகி
தவசித்தி சிவபூசை மாதவத்தோ ரெவர்களுக்குந் தலைமை பெற்றோன்
பவமுற்று மகற்றுதுரு வாசமுனி வரனிந்தப் பதியின் மேவி
நவமுற்ற மதிவார விரதமொரு நூறாண்டு நயந்து செய்தான். 15

இவ்விரத மிவனாற்று முறைகங்கா தானுளத்தி லெண்ணி வானோர்
பவ்வமொறுத் தோன்றுதிப்பப் பவளவரை மேனிலவு பரந்த தென்ன.
செவ்வியமெய்த் திருமேனி நீறிலங்க வுமையுடனே சிறந்து தோன்றி
எவ்வரம்வேண் டுவதென்றான் முனியரனை வணங்கியெழுந்திதனைச்
சொல்வான்

நின்னையருச் சித்துவலம் வந்துதொழ நின்கதையி னேச மாக
உன்னருணா மத்தையுரைத் தென்னுடைய விருத்தியெல்லாம் உனக்கே யாக்கி
பன்னுசரா சரங்களெல்லாம் நின்வடிவாய்க் கண்டுசிவ பத்தர்க் கென்றும்
அன்னமுத லுபரிக்க வவர்கடெரி சனந்தினத்தி னன்பு மேவ. 17

பலகடல்கள் ளொன்றாகப் பரந்திடுபோ தினுமசையாப் பத்தி மேவ
அலகில்வரம் புரிந்தருள்வாய் ஞானவொளி யேயன்மா லாதி யோர்கள்
குலவுமருச் சனைமழ்ந்த கொற்றவனே யென்றுமுனி கூறச் செம்பொன்
இலகுமக மேருவில்லி யிசைத்தலைதந் தனமிதுகே ளென்று கூறும். 18

அபராத மியற்றாரபாற் சபதமிசை யேலிசைத்தா யாயி னிந்தச்
சுபமான வரம்பலியா தென்றுமுனி யருண்முறையே துணிகு வோமியான்
உபமான மில்லாய்நான் எவ்வுலகுஞ் சென்றுவரு முரநல் கென்றான்
தபராச னுரைத்தவரம் கொடுத்திறைவன் மறைந்தனனத் தவனுஞ் சென்று 19

எல்லார்க்கு மருள்புரிதற் பொருட் டுலகம் யாவையினு மிலங்குகின்றான்
வல்லார்க்கு முலையிடத்தான் றிருச்சோற்றுத் துறையின் முனிவரர்வா னோர்கள்
நல்லார்க்கும் பொருந்தினர்இவ் விரதத்தாற் கார்த்திகையினண்ணு திங்கள்
அல்லாத திங்களிலிவ் விரதஞ்செய் திடினுமெண்ணில் பொருட் கதிப ராவர். 20

பாட பேதம்: அல்லாத திங்களினோன் பாற்றிடினும் மெண்ணில் பொருட்
கதிப ராவர்.

ஆகத் திருவிருத்தம் 408

சோமவார விரதச் சருக்கம் முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

(சிவராத்திரிச் சருக்கம்)

காம மாதி களைந்த முனிவர்காள்!
சோம வார மகிமையைச் சொற்றனம்
வாம மாதினன் மாசிவ ராத்திரி
ஏம மேன்மை யினிதெடுத் தேத்துவாம். 1

திருந்து பாடற் செழுந்தமி ழாவலர்
இருந்த சங்க மிலங்கிய கூடலிற்
பொருந்து வேடன் பொருசிலைச் சம்பகன்
மருந்தில் கூற்றின் வடிவென வந்தவன். 2

அடுத்த கூட லரங்க மெனும்பதி
நடுச்செ றிந்திருள் நண்ணிய கானிடை
வடுக்கொள் சிந்தையன் மன்னி வழிச்செல்வார்
நடுக்க மெய்த நலிவுசெய் தங்கவர். 3

கைக்கொள் செம்பொன் கலன்களி யாவையும்
துக்க மெய்திடச் சூறைகொண் டப்பொருள்
மிக்க காமத்து வேசியர் பானல்கி
தக்க வந்தணர் தங்கொலை யுஞ்செய்து. 4

சொன்ன நற்குலத் தோகையர் தங்களை
வன்மை செய்து மருவத் திரிபவன்
பொன்ன ரங்கம் புகழ்திரு வானைக்கா
வென்னு மூரி லிறைவர் தனங்களை. 5

கரவிற் கொண்டு கரவடர் தம்மொடு
விரவிச் சோர மிகச்செய் வானோர் நாட்
டிரவெற் பான சிராமலை நல்விழா
பரவச் செல்லும் பலரொடு சென்றுதான். 6

ஆல யந்தனில் எய்தி யரும்பொருள்
கோல வஞ்சகன் கொண்டு புறப்படத்
தாலம் விண்புகழ் தானிகர் கண்டவன்
ஓல வாரி யுடைந்தெனக் கூவினார். 7

நிறைந்த வஞ்ச நெடுஞ்சிலைச் சம்பகன்
உறைத்த கள்வ ருடன்பயந் தோடலும்
கறைக்கொள் வன்படைக் கைக்கொடு காவலர்
துறைப்பொ ருந்திசை தோறும் வளைத்தனர். 8

வேட்டைக் கானில் வியன்வலைச் சூழ்ந்தன்
கோட்டுக் கேழல் குலத்தொடு சேர்ந்தென
வீட்டத் தோடு மிவனகப் பட்டெதிர்
கூட்டத் தோடு கொடுஞ்சமர் செய்தனன். 9

சாம மொன்றிற் றருஞ்சமர் செய்தபின்
காம லேடர் கலங்கி விழுந்தனர்
நாம வேட்டுவன் நண்ணும் படுகரில்
வாம மாக மறைந்தனன் கண்டிலர். 10

காவ லாளர் கரவடன் கொள்பொருள்
யாவு மேவ வெடுத்தரன் கோவிலுள்
ஓவி லாவகை யுய்த்தவ ரேகினார்
தாவில் சம்பகன் றானிரப் பார்கள்போல். 11

கந்தை சுற்றிக் கரத்தினி லோடுகொண்
டிந்த வேளை பிழைத்தன மென்றுபோய்
அந்தண் மாநக ரந்தொறுஞ் செல்பவன்
வந்தவ் வோதன மாபுர மெய்தினான். 12

அன்று நற்சிவ ராத்திரி யாதலாற்
கொன்றை சூடிடுங் குழகன் றெரிசனைக்
கொன்றி வந்தன ருத்தம ரெண்ணிலார்
நன்று வேடன் களவு கருதியே. 13

ஊனு மின்றி யுரக்கமு மின்றியே
பேணு நண்பக லும்பெருங் கங்குலும்
தாணு வாலயம் தாபதர் சேரிடம்
மாணு வீதி மறுகுதொ றெய்தியே. 14

அயர்வு நோக்கின னங்கங் கவரவர்
செயல்செய் யன்பிற் சிவனைத் தொழுதலாற்
துயில்பொ ருந்திலர் சோர்வில ரீதலால்
அயில்கொள் காவலர் ஆர்த்தன ரெங்கணும். 15

வண்ண மிங்கிவை நோக்கிய வஞ்சகன்
என்னுஞ் சோரஞ் செயும்வழி யென்னென
புண்ணி யத்தவர் போலரன் கோயிலுள்
நண்ணி னான்சென்று நான்கெனும் யாமத்தில் 16

ஆங்கு நாதன் அருச்சனை செய்பவர்
தாங்கு நாற்பஞ்ச சாந்திகள் சமகங்கள்
பாங்கு சீருத் திரசெபம் பண்ணுவோர்
ஓங்கு மற்றைத் தரும முருற்றுவோர். 17

எவ்வி டத்து மியைந்தநற் றீபமும்
செவ்வி தீற்பகற் போலச் செறிந்தன
வவ்வு சோரம் புரிதற்கு வாய்த்திடா
தெவ்வ மோடு புறந்தனி லெய்தலும் 18

கங்கு னீங்கக் கனைகதிர் தோன்றலும்
பொங்கு காவிரி யாடிப் புனிதர்போற்
றங்கு பிச்சையிற் றன்பசி மாற்றியே
மங்க லில்லா(த) மறுநக ரெய்தினான். 19

பாவ மச்சம் பழிபகைக் கேதுவாய்த்
தாவி லன்னிய(ர்) தாரம் விரும்புறும்
ஓவின் மூட ரொடுதினங் கூடியே
மேவு சோர விருத்தி தவிர்ந்திலன். 20

எண்ணு நாட்பல விம்முறை செல்வுழி
மண்ணி லங்க மரித்தனன் ஆவியைத்
துண்ணெனச் சமன் றூறுவர் கொண்டுபோய்
நண்ணு நீதி நமன்முன் விடுத்தனர். 21

சீறு மந்தகன் சித்திர குத்தனைக்
கூறி வன்செய் கொடுமைக ளென்றலும்
தேறி யோதுவன் றேருதி யீங்கிவன்
ஏறு பாவங்க ளெண்ணில செய்தனன். 22

ஆயி னுங்கள வரசையி னாலுணல்
மேய நித்திரை விட்டுச் சிவநிசித்
தூய சோற்றுத் துறைதனில் மற்றைநாள்
ஏய பிச்சை யெடுத்து நுகர்தலால். 23

அதுசி றந்த விரதமென் றானதால்
கதமெ னச்செயும் பாவங் கழிந்ததால்
விதுமு டிப்பவன் வெள்ளி மலைக்கிவன்
சதுர மாய்ச்செல வுய்ப்பது தக்கதே. 24

என்னும் வேலையி லீச னருளினால்
நன்மை நந்தி கணத்ட து னண்ணினான்
பன்னு கூற்றுப் பயந்தெதிர்ப் போய்ப்பணிந்(து)
இன்ன குற்றம் பொறுத்தரு ளென்றலும். 25

நாத னோன்பு நயந்தமை யோர்ந்திடா(து)
ஏத நீசெய்த தென்னெனச் சீறியே
சாது பூதரிற் காலனைக் கட்டிநீ
போது மென்று புளினனை மானமேல் (வேடனை) 26

ஏற்றி வெள்ளி வரையிலுய்த் தங்கவன்
சாற்று பூதத் தலைமை பெறச்செய்து
கூற்றைப் பார்ப்பதி கொண்கன்முன் விட்டனன்
போற்று கூற்றும் பணிந்து புகலுவான். 27

நாத சம்பகன் நன்மையை நாடிலர்
தூத ரென்முன் னுணைவிற் கொணர்ந்தனர்
காத னீதிக் கணக்கை வினவிநின்
பாத மேவுறு பத்த னிவனென. 28

கருத்தி லுன்னிக் கயிலையில் உய்ப்பனென்(று)
அருத்தி செய்பொழு தந்நந்தி தேவர்வந்(து)
உருத்தெ னைப்பிடித் தோர்சம் பகனையும்
திருத்த மிக்கவித் திண்வரை யேற்றினார். 29

தந்த சம்பக னாலருட் சாமிநின்
செந்தி ருப்பதச் சேவையும் பெற்றனன்
மந்தி தேவர் ஒறுத்தலி னான்செயும்
சுந்த மில்பிழை யாவு மகன்றதால். 30

இன்று காத்தரு ளென்னலு மெம்பிரான்
நன்று நின்பிழை நாம்பொறுத் தோமினித்
துன்று சோற்றுத் துறையிற் சிவநிசி
யன்று புத்தி யபுத்தியோ டாயினும். 31

சேவை நானஞ் சிவார்ச்சன செய்பவர்
பாவ ராயினும் பத்தரா வார்நமக்(கு)
ஆவ நாங்கவர்க் கல்லலி யற்றிடேல்
மேவி யின்சொல் விளம்பி வணங்குவாய். 32

ஒழுக்கந் தன்னை யுயிரென வோம்பிய
வழுக்கி லன்பர்க்கு வந்திடர் நீசெயில்
இழுக்க தண்டஞ்செய் வோமென் றிறைசொல
வ்ழுக்கில் காலனும் அஞ்சி வணங்கியே. 33

அண்ண லேயுன் னருண்முறை செய்யனென்(று)
எண்ணு நல்விடை கொண்டபின் இன்னருள்
நண்ணு நந்தியை நாடி வணங்கியே
வண்ண மேவுதன் மாநகர் எய்தினான். 34

வெம்பு தீவினை வேடனுஞ் சேவையால்
எம்பி ரான்கணத் துக்கிறை யாயினான்
நம்பு நற்சிவ ராத்திரி மேன்மையை
உம்ப ராலு முரைப்பதற் கொண்ணுமோ. 35

அரிய மாதவத் தந்தணீ ரோதன
புரியின் மேன்மையைப் புத்திவைத் தின்புறத்
தெரியு மெய்ச்சிவ பத்தர்க்குச் செப்புமென் (று)
உரிய சூத முனிவர னோதினான். 36

ஓது சூதனை யுத்தம மாதவர்
காதல் செய்து புராணக் கனியமு(து)
ஆத ரத்தி னுகாந்தன்ன பூரணி
மாது பாகனை வாழ்த்தி மகிழ்ந்தனர். 37

வேறு

ஓதன மாபுரி மான்மிய நாடொறு மோதி யுரைப்பார்கள்
காதலி னாற்பொருள் ஓதினர் மாகதை காது நிறைப்பார்கள்
பூதல மீதர சாளுவர் வானவர் பூமி புரப்பார்கள்
மேதகு ஞானமு மேவி யுலாச மெய் வீடு பெறற்பாலர். 38

வேறு

பலங்கொள் மறையா கமங்கள்சிவ பத்தர் மழைபார்த் திபர்வாழி
நலங்கொள் பசுவந் தணர்தரும நாடுந் தானந் தவம்வாழி
துலங்கு மன்ன பூரணிவாழ் தொலையாச் செல்வர் பதம்வாழி
இலங்குஞ் சோற்றுத் துறைமகிமை யியலும் புராணத் தமிழ்வாழி. 39

ஆகத் திருவிருத்தம் 447

சிவராத்திரிச் சருக்கம் முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

சுபமஸ்து

திருச்சோற்றுத்துறை தலபுராணம் முற்றிற்று

௨

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிய

# திருச்சோற்றுத்துறை பதிகம்

பண் — தக்கராகம்

**(முதற்றிருமுறை)**

**திருச்சிற்றம்பலம்**

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னா தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

பாலு நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலு நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 2

செய்ய செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளோர் பாக மாயவெம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

றையு மரவும் புனலுஞ் சடைவைத்து
றையு மோதி மயான மிடமாக
றையுஞ் செல்வ முடையார் காவிரி
றையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 6

சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண் டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாரருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

பெண்ணோர் பாக முடையார் பிறைசென்னிக்
கண்ணோர் பாகங் கலந்த நுதலினார்
எண்ணா தரக்க னெடுக்க வூன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

தொழுவா ரிருவர் துயர நீங்கவே
அழலா யோங்கி யருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியான் மிக்கவெம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

கோது சாற்றித் திரிவா ரமண்குண்டர்
ஓது மோத்தை யுணரா தெழுநெஞ்சே!
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்
சிந்தை செய்ம்மி னடிய ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு சுவாமிகள்

அருளிச்செய்த

# திருச்சோற்றுத்துறை பதிகம்

திருநேரிசை

**(4.திருமுறை)**

திருச்சிற்றம்பலம்

பொய்விரா மேனிதன்னைப் பொருளெனக் காலம்போக்கி
மெய்விரா மனத்தனல்லேன் வேதியா வேதநாவா
ஐவரா லலைக்கப்பட்ட வாக்கைகொண் டயர்த்துப்போனேன்
செய்வரா லுகளுஞ்செம்மைத் திருச்சோற்றுத் துறையனாரே. 1

கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்கவேண்டா
எட்டவாங் கைகள்வீசி யெல்லிநின் றாடுவானே
அட்டமா மலர்கள்கொண்டே யானஞ்சு மாட்டவாடிச்
சிட்டரா யருள்கள் செய்தார் திருச்சோற்றுத் துறையனாரே. 2

கல்லினாற் புரமூன்றெய்த கடவுளைக் காதலாலே
எல்லியும் பகலுமுள்ளே யேகாந்த மாகவேத்தும்
பல்லில்வெண் டலைகையேந்திப் பல்லிளந் திரியுஞ்செல்வர்
சொல்லுநன் பொருளுமாவார் திருச்சோற்றுத் துறையனாரே. 3

கறையராய்க் கண்ட நெற்றிக் கண்ணராய்ப் பெண்ணோர்பாகம்
இறையரா யினியராகித் தனியராய்ப் பனிவெண்டிங்கள்
பிறையராய்ச் செய்தவெல்லாம் பீடராய்க் கேடில் சோற்றுத்
துறையராய்ப் புகுந்தென்னுள்ளச் சோர்வுகண் டருளினாரே. 4

பொந்தையைப் பொருளா வெண்ணிப் போருக்கெனக் காலம்போனேன்
எந்தையே யேகமூர்த்தி யென்றுநின் றேத்தமாட்டேன்
பந்தமாய் வீடுமாகிப் பரம்பர மாகிநின்று
சிந்தையுட் டேறல் போலுந் திருச்சோற்றுத் துறையனாரே. 5

பேர்த்தினிப் பிறவாவண்ணம் பிதற்றுமின் பேதைபங்கன்
பார்த்தனுக் கருள்கள் செய்த பாசுப தன்றிறமே
ஆர்த்துவந் திழிவதொத்த வலைபுனற் கங்கையேற்றுத்
தீர்த்தமாய்ப் போதவிட்டார் திருச்சோற்றுத் துறையனாரே. 6

கொந்தார்பூங் குழலினாரைக் கூறியே காலம்போன
எந்தையெம் பிரானாய்நின்ற விறைவனை யேத்தாதந்தோ!
முந்தரா வல்குலாளை யுடன்வைத்த வாதிமூர்த்தி
செந்தாது புடைகள்சூழ்ந்த திருச்சோற்றுத் துறையனாரே. 7

அங்கதி ரோனவனை யண்ணலாக் கருதவேண்டா
வெங்கதி ரோன்வழியே போவதற் கமைந்துகொண்மின்
அங்கதி ரோனவனை யுடன்வைத்த வாதிமூர்த்தி
செங்கதி ரோன்வணங்குந் திருச்சோற்றுத் துறையனாரே. 8

ஓதியே கழிக்கின்றீர்கள் உலகத்தீர் ஒருவன்றன்னை
நீதியா னினையமாட்டீர் நின்மல னென்றுசொல்லீர்
சாதியா நான்முகனுஞ் சக்கரத் தானுங்காணாச்
சோதியாய்ச் சுடரதானார் திருச்சோற்றுத் துறையனாரே. 9

மற்றுநீர் மனம்வையாதே மறுமைபைக் கழிக்கவேண்டில்
பெற்றதோ ருபாயந்தன்னாற் பிரானையே பிதற்றுமின்கள்
கற்றுவந் தரக்கனோடிக் கயிலாய மலையெடுக்கச்
செற்றுகந் தருளிச்செய்தார் திருச்சோற்றுத் துறையனாரே. 10

திருச்சிற்றம்பலம்

திருவிருத்தம்

(4-ந் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

காலை யெழுந்து கடிமலர் தூயன தாங்கொணர்ந்து
மேலை யமரர் விரும்பு மிடம்விரை யான்மலிந்த
சோலை மணங்கமழ் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
மாலை மதியமன் றோவெம் பிரானுக் கழகியதே. 1

வண்டணை கொன்றையும் வன்னியு மத்தமும் வாளரவும்
கொண்டணைந் தேறு முடியுடை யான்குரை சேர்கழற்கே
தொண்டணைந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
வெண்டலை மாலையன் றோவெம் பிரானுக் கழகியதே. 2

அளக்கு நெறியின னன்பர்க டம்மனத் தாய்ந்துகொள்வான்
விளக்கு மடியவர் மேல்வினை தீர்த்திடும் விண்ணவர்கோன்
துளங்குங் குழையணி சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
திளைக்கு மதியமன் றோவெம் பிரானுக் கழகியதே. 3

ஆய்ந்தகை வாளர வத்தொடு மேல்விடை யேறியெங்கும்
பேர்ந்தகை மானட மாடுவர் பின்னு சடையிடையே
சேர்ந்தகைம் மாமலர் துன்னிய சோற்றுத் துறையுறைவார்
ஏந்துகைச் சூல மழுவெம் பிரானுக் கழகியதே. 4

கூற்றைக் கடந்ததுங் கோளர வார்த்ததுங் கோளுழுவை
நீற்றிற் றுதைந்து திரியும் பரிசது நாமறியோம்
ஆற்றிற் கிடந்தங் கலைப்ப வலைப்புண் டசைந்ததொக்கும்
சோற்றுத் துறையுறை வார்சடை மேலதோர் தூமதியே. 5

வல்லாடி நின்று வலிபேசு வார்கோளர் வல்லசுரர்
கொல்லாடி நின்று குமைக்கிலும் வானவர் வந்திறைஞ்சச்
சொல்லாடி நின்று பயில்கின்ற சோற்றுத்துறை யுறைவார்
வில்லாடி நின்ற நிலையெம் பிரானுக் கழகியதே. 6

ஆயமுடையது நாமறி யோமர ணத்தவரைக்
காயக் கணைசிலை வாங்கியு மெய்துந் துயக்கறுத்தான்
தூயவெண் ணீற்றினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
பாயும்வெண் ணீர்த்திரைக் கங்கையெம் மானுக் கழகியதே. 7

அண்ட ரமரர் கடைந்தெழுந் தோடிய நஞ்சதனை
உண்டு மதனை யொடுக்கவல் லான்மிக்க வும்பர்கள்கோன்
தொண்டு பயில்கின்ற சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இண்டை மதியமன் றோவெம் பிரானுக் கழகியதே. 8

கடன்மணி வண்ணன் கருதிய நான்முகன் றானறியா
விடமணி கண்ட முடையவன் றானெனை யாளுடையான்
சுடரணிந் தாடிய சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
படமணி நாகமன் றோவெம் பிரானுக் கழகியதே. 9

இலங்கைக் கிறைவ னிருபது தோளு முடிநெரியக்
கலங்க விரலினா லூன்றி யவனைக் கருத்தழித்த
துலங்கன் மழுவினன் சோற்றுத் துறையுறை வார்சடைமேல்
இலங்கு மதியமன் றோவெம் பிரானுக் கழகியதே. 10

திருச்சிற்றம்பலம்

---

## திருக்குறுந்தொகை

### (5-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

கொல்லை யேற்றினர் கோளர வத்தினர்
தில்லைச் சிற்றம் பலத்துறை செல்வனார்
தொல்லை யூழியர் சோற்றுத் துறையர்க்கே
வல்லை யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 1

முத்தி யாக வொருதவஞ் செய்திலை
அத்தி யாலடி யார்க்கொன் றளித்திலை
தொத்து நின்றலர் சோற்றுத் துறையர்க்கே
பத்தி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 2

ஒட்டி நின்ற வுடலுறு நோய்வினை
கட்டி நின்ற கழிந்தவை போயறத்
தொட்டு நின்றுமச் சோற்றுத் துறையர்க்கே
பட்டி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 3

ஆதி யானண்ட வாணர்க் கருணல்கும்
நிதி யானென்று நின்மல னேயென்றும்
சோதி யானென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
வாதி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 4

ஆட்டி னாயடி யேன்வினை யாயின
ஓட்டி னாயொரு காதி லிலங்குவெண்
தோட்டி னாயென்று சோற்றுத் துறையர்க்கே
நீட்டி நீபணி செய்மட நெஞ்சமே, 5

பொங்கி நின்றெழுந் தகட னஞ்சினைப்
பங்கி யுண்டதோர் தெய்வமுண் டோசொலாய்
தொங்கி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்குத்
தங்கி நீபணி செய்மட நெஞ்சமே. 6

ஆணி போலநீ யாற்ற வலிமைகாண
ஏணி போலிழிந் தேறியு மேங்கியும்
தோணி யாகிய சோற்றுத் துறையர்க்கே
பூணி யாய்ப்பணி செய்மட நெஞ்சமே. 7

பெற்ற மேறிலென் பேய்படை யாகிலென்
புற்றி லாடர வேயது பூணிலென்
சுற்றி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
பற்றி நீபணி செய்மட நெஞ்சமே. 8

அல்லி யானர வைந்தலை நாகணைப்
பள்ளி யானறி பாத பரிசெலாம்
சொல்லி நீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
புல்லி நீபணி செய்மட நெஞ்சமே. 9

மிண்ட ரோடு விரவியும் வீறிலாக்
குண்டர் தம்மைக் கழிந்துய்யப் போந்துநீ
தொண்டு செய்தென்றுஞ் சோற்றுத் துறையர்க்கே
உண்டு நீபணி செய்மட நெஞ்சமே. 10

வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போயல றவ்விர லூன்றினான்
சூழ்ந்த பாரிடஞ் சோற்றுத் துறையர்க்குத்
தாழ்ந்து நீபணி செய்மட நெஞ்சமே. 11

திருச்சிற்றம்பலம்

## திருத்தாண்டகம்
### (6-ம் திருமுறை)
திருச்சிற்றம்பலம்

மூத்தவனா யுலகுக்கு முந்தி னானே
முறைமையா லெல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனா யேழுலகு மாயி னானே
யின்பனாய்த் துன்பங் களைகின் றானே
காத்தவனா யெல்லாந்தான் காண்கின் றானே
கடுவினையேன் றீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயந் தானே. 1

தலையவனா யுலகுக்கோர் தன்மை யானே
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே
நிலையவனாய் நின்னொப்பா ரில்லா தானே
நின்றுணராக் கூற்றத்தைச் சீறிப் பாய்ந்த
கொலையவனே கொல்யானைத் தான்மே லிட்ட
கூற்றுவனே கொடிமதில்கண் மூன்று மெய்த
சிலையவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயந் தானே. 2

முற்றாத பான்மதியஞ் சூடி னானே
முளைத்தெழுந்த கற்பகத்தின் கொழுந்தொப் பானே
உற்றாரென் றொருவரையு மில்லா தானே
யுலகோம்பு மொண்சுடரே யோதும் வேதம்

கற்றானே யெல்லாக் கலைஞா னமுங்
கல்லாதேன் தீவினைநோய் கண்டு போகச்
செற்றானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயம் நானே. 3

கண்ணவனா யுலகெல்லாங் காக்கின் றானே
காலங்க ளூழிகண் டிருக்கின் றானே
விண்ணவனாய் விண்ணவர்க்கு மருள்செய் வானே
வேதனாய் வேதம் விரித்திட் டானே
எண்ணவனே எண்ணார் புரங்கண் மூன்றும்
இமையாமு னெரிகொளுவ நோக்கி நக்க
திண்ணவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 4

நம்பனே நான்மறைக ளாயி னானே
நடமாட வல்லானே ஞானக் கூத்தா
கம்பனே கச்சிமா நகரு ளானே
கடிமதில்கண் மூன்றினையும் பொடியா வெய்த
அம்பனே யளவிலாப் பெருமை யானே
யடியார்கட் காரமுதே யானே றேறும்
செம்பொனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 5

ஆர்ந்தவனே யுலகெலா நீயே யாகி
யமைந்தவனே யளவிலாப் பெருமை யானே
கூர்ந்தவனே குற்றால மேய கூத்தா
கொடுமூ விலையதோர் சூல மேந்திப்
பேர்ந்தவனே பிரளயங்க ளெல்லா மாய
பெம்மானென் றெப்போதும் பேசு நெஞ்சிற்
சேர்ந்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 6

வானவனாய் வண்மை மனத்தி னானே
மாமணிசேர் வானோர் பெருமா னியே
கானவனா யேனத்தின் பின்சென் றானே
கடிய வரணங்கண் மூன்றட் டானே
தானவனாய்த் தண்கயிலை மேவி னானே
தன்னொப்பா ரில்லாத மங்கைக் கென்றும்
தேனவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபயு நானே. 7

தன்னவனா யுலகெல்லாந் தானே யாகித்
தத்துவனாய்ச் சார்ந்தார்க்கின் னமுதா னானே
என்னவனா யென்னிதய மேவி னானே
யீசனே பாச வினைக டீர்க்கும்
மன்னவனே மலைமங்கை பாக மாக
வைத்தவனே வானோர் வணங்கும் பொன்னித்
தென்னவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய னானே. 8

எறிந்தானே யெண்டிசைக்குங் கண்ணா னானே
யேழுலக மெல்லாமுன் னாய்நின் றானே
அறிந்தார்தா மோரிருவ ரறியா வண்ண
மாதியு மந்தமு மாகி யங்கே
பிறிந்தானே பிறரொரு ரறியா வண்ணம்
பொம்மானென் மறப்போது மேத்து நெஞ்சில்
செறிந்தானே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 9

மையனைய கண்டத்தாய் மாலு மற்றை
வானவரு மறியாத வண்ணச் சூலக்
கையவனே கடியிலங்கைக் கோனை யன்று
கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற
மெய்யவனே யடியார்கள் வேண்டிற் றியும்
விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்கும்
செய்யவனே திருச்சோற்றுத் துறையுளானே
திகழொளியே சிவனேயுன் னபய நானே. 10

திருச்சிற்றம்பலம்

௨

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# திருச்சோற்றுத்துறை பதிகம்

பண் — கௌசிகம்

**(7-ந் திருமுறை)**

திருச்சிற்றம்பலம்

அழனீ ரொழுகி யனைய சடையும்
உழையீ ருரியும் உடையா னிடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழனீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. 1

பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வ னமல னிடமாம்
இண்டை கொண்டன் பிடைய றாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. 2

கோல வரவுங் கொக்கி னிறகும்
மாலை மதியும் வைத்தா னிடமாம்
ஆலு மயிலு மாட லளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. 3

பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போலுூற் கோமாற் கிடமாம்
அளிக்கு மாத்தி யல்லான் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. 4

உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்த னிடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. 5

ஓதக் கடனஞ் சினையுண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புணலுண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. 6

இறந்தா ரென்ப மெருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7

காமன் பொடியாக் கண்ணொன் றிமைத்த
ஓமக் கடலா ருகந்த விடமாம்
தேமென் குழலார் சேக்கை புகைத்த
தூமம் வீசும்பார் சோற்றுத் துறையே. 8

இலையா லன்பா லேத்து மவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தா ரிடமாம்
தலையாற் றாழுந் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. 9

சுற்றார் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றா ரடியா ரடிநா யூரன்
சொற்றா னிவைகற் றார்துன் பிலரே. 10

**திருச்சிற்றம்பலம்**



# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்,
25-11-2001.

மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.